**மங்கையர் மலர்**

# நாவல் போட்டி

வாசகிகளே!

நமது பெண்களின் கலாசாரம், பண்பாடு, பிரச்னைகள் இவற்றை மையமாகக் கொண்ட கதைகளையே 'மங்கையர் மலர்' வெளியிடுகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள். மீண்டும் அதை நிருபிக்கும் வண்ணம் வாசகிகளாகிய உங்களுக்கு ஒரு நாவல் போட்டி வைப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

நிபந்தனைகள்

1. மூன்று தலைமுறைப் பெண்களின் (மகள், தாய், பாட்டி) வாழ்க்கையை மையமாகக் கொண்ட சமூக நாவலாக இருக்க வேண்டும்.
2. நாவல் முழுப் பக்க தாளில் நூற்றைம்பதிலிருந்து இருநூறு பக்கங்களுக்குள் இருத்தல் வேண்டும்.
3. நடுவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் பரிசுக்குரிய ஒரு நாவலுக்கு ரூ 3000/– வழங்கப்படும்.
4. தேர்ந்தெடுக்கப்படும் நாவல் மங்கையர் மலர் பிப்ரவரி 87 ஆண்டு மலரிலிருந்து தொடர்கதையாக வெளி வரும்.
5. ஆசிரியரின் தீர்ப்பே முடிவானது.
6. நாவல்கள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி: **31.12.1986**



ஆபீசிற்குள் நுழைந்ததும் முதலில் கண்ணில் பட்டது வெறுமையாயிருந்த சாந்தாவின் நாற்காலிதான். அவளுக்கு என்ன ஆயிற்று? பாவம், இன்றும் லேட்டா? இந்த முசுடு 'மெமோ' கொடுத்து விடப் போகிறதே! என் கைப்பையை அதனிடத்தில் வைத்துவிட்டு, சாந்தா, லீவா, லேட்டா என்று அறியப் புறப்படுமுன் சாந்தா ஓடோடி வந்தாள். ரிஜிஸ்தரில் கையெழுத்திட்டதும் 'அப்பாடா' என்று இருக்கையில் விழுந்தாள்.

என்ன ஆனாலும், எந்த அவசரத்திலும், சாந்தா புடைவை கட்டும் நறுவிசே தனிதான். முன் கொசுவத்தின் அடுக்கோ, மேல் புடைவைத் தலைப்பின் விசிறி மடிப்போ நலுங்காது. எனக்கு இங்கு ஒரு பர்லாங்குக்குள் இருக்கும் வீட்டிலிருந்து வருவதற்குள் வியர்த்து விறுவிறுத்து, குங்குமம் கலைந்து, புடைவை கசங்கி, சமையலறையிலிருந்து வெளிப்பட்டது போலாகிவிடும்.

''நல்ல புடைவையைக் கூட மோசமாகக் கட்டுவது எப்படி என்பதற்கு அம்மாவும், சாதாரண கைத்தறிப் புடைவையைக் கூட எப்படிக் கம்பீரமாக உடுத்துவது என்பதற்கு மிஸஸ் சாந்தாவும் உதாரணங்கள்'' என்பாள் என் பெண்.

''எல்லாம் நாலு பிள்ளை குட்டி பெற்று சம்சாரத்தில் அடிபட்டால் அப்போது புடைவையும் அலங்காரமும் தெரியும். அவளுக்குக் கல்யாணமாகி ஒரு வருஷம்தானே ஆகிறது! அப்புறம் பார்., வயிற்றுப் பிழைப்புக்கு ஓடுவதே நித்திய கண்டமாகி விடும்'' என்பேன் நான் பதிலுக்கு.

''ஏன் சாந்தா, லேட் இன்று?'' பிற்பகல் கான்டீனில் எங்களின் மகாநாடு ஆரம்பமாகியது. டிபன் பாக்ஸைத் திறந்தபடி கேட்டேன்.

''ப்சு...'' சூள் கொட்டினாள் அவள். ''புறப்பட்டுக் கொண்டிருந்தேன். மகாராணி சின்ன நாத்தனார் வந்தாள். வாய்க்கு ஒன்றுமே பிடிக்கவில்லையாம். உடனே என் மாமியார், ''சாந்தா, அவளுக்கு உப்புக் காரமாய் மசாலா கறி வேண்டுமாம். நாலு கத்தரிக்காயை வதக்கி விடும்மா...'' என்று உத்தர விட்டு விட்டாள்.

''எல்லாரும் ரமா ஆக முடியுமா? பிக்குப் பிடுங்கல் இல்லே! ஏது செய்தாய், எத்தனை செய்தாய் என்று கேட்பாரில்லை! உன் பணம் உனக்குத் தேவையில்லையானால் உன்னிடம் 'கடனாக' வாங்கிக் கொள்கிறேன் என்று கூறும் கணவன்'' — சாந்தா சிரிக்க முயன்றாள்.

''ம்... என் கணவரும் இருக்காரே... எத்தனை கொட்டிக் கொடுத்தாலும் ஏதாவது பிளாக் மணி வைத்திருப்பாயே என்க் கொக்கி போட்டு இழுப்பார்...'' சொல்லும் போதே கலாவுக்குக் கண்களில் நீர்.

''ஐயோ... ஐயோ....'' நான் நாசுக்காகத் தலையிலடித்துக் கொண்டேன். ''இந்த ரமா பட்ட கஷ்டம் உங்களுக்குத் தெரியாது. தலை தீபாவளிக்குப் பிறந்தகம் போன போது ''கல்யாணத்தின் போதே போடுவதாகச் சொன்ன வைரத்தோட்டைப் போட்டுக் கொண்டு வா. கல்யாணத்தில் நல்லா உங்கப்பா ஏமாத்திட்டார். வைரத்தோடு இல்லாம மட்டும் வராதே...'' என்று அவள் மாமியார் கண்டித்துச் சொல்லிவிட்டார்.

''அதற்குப் பதில்தான் அப்போதே மூன்று பவுன் நகை அதிகமாக வாங்கிக்கொண்டீர்களே!'' என்று ரமா கேட்கவில்லை.

அவள் புருஷனும் சமர்த்தாக மனைவியைப் பிறந்தகத்தில் விட்டு விட்டுக் கிளம்பி வந்துவிட்டார், வைரத்தோட்டிற்காக...''

''அடப்பாவி, அப்புறம்?'' — சாந்தா கையிலெடுத்த உப்புமாவைத் தன் டப்பாவில் போட்டுவிட்டுத் திகைத்துப் பார்த்தாள்.

''அப்புறம் என்ன? பாவம், ரமாவின் பிறந்தகம் சுமாரான குடும்பம். அடுத்தடுத்து தங்கைகள். அதன் பின் இரண்டு வருடங்கள் ஆயிற்று., ரமா 'டால்' அடித்துக் கொண்டு திரும்பி வர. அதற்குள் இங்கு ஒரு கம்பெனியில் கிடைத்திருந்த வேலை போய் விட்டது. மறுபடி வேலை தேடி நம் ஆபீசில் அதிர்ஷ்டவசமாகச் சேர இன்னொரு இரண்டு வருடங்கள்! ஆக, நாலு வருடத்துச் சம்பளப் பணம் நஷ்டம்! கம்பெனியில் இருந்திருந்தால் கிடைத்திருக்கும் சீனியாரிட்டி போனஸ் கோவிந்தா.''

மாமியார் கண்ணை மூடினாள். ஏற்பட்ட லாப நஷ்டக் கணக்கைக் கணவனும் புரிந்து கொண்டான். நாகரிகமும் தெரிந்துகொண்டான். இப்போது இவள் வைத்ததுதான் சட்டம்.

'லஞ்ச்சை' முடித்துக் கொண்டு எழுந்தோம். இந்த ஆபீசில் பதினைந்து வருடங்களாக உழைத்துக் கொண்டிருக்கும் எனக்கு ஒவ்வொருவர் சரித்திரமும் அத்துபடி. ப்ரமோஷன் வந்தால் மாற்றல் வரும், இரட்டைக் குடித்தனம் ஆகும் என்று ஒரே இடத்தைத் தேய்த்துக் கொண்டிருப்பவள் நான். என்னிடம் எல்லாருக்கும் ஒரு மதிப்பு, பிடிப்பு உண்டு. காரணம் நான் கொஞ்சம் இதமாகப் பேசுவேன், இங்கிதமாக ஆலோசனைகள் கூறுவேன். பொறுமையைப் போதிப்பேன். கணவன் — மனைவி தகராறு, மாமியார் மருமகள் சண்டை, தற்கொலை முயற்சி, ஏன் கருக்கலைப்பு முயற்சி உள்பட பல விஷயங்களில் பிரச்னைகளைத் தீர்த்த பெருமை எனக்கு உண்டு.

சுகுணா மூன்றாவதை சீக்கிரம் உண்டான போது வீட்டிலிருந்த விதவை நாத்தனார் பிடுங்கினாளாம். ''இதுதான் தெரிந்தது உனக்கு. வேறு என்ன தெரியும்?'' என்று ஏசினாள். நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாம் போல அவள் வந்து அழுதாள்.

''ஆபீஸ் ஆபீஸ் என்று மடி ஆசாரம் இல்லாது, பூஜை புனஸ்காரம் செய்யாது குதிரை மாதிரி டிரெஸ் பண்ணிக் கொண்டு சுற்றினால் இப்படித்தான் புருஷனுக்குப் படுத்தும்'' என்றாளாம் நாத்தனார்க்காரி. அன்று இதைக் கேட்ட நான் சிரித்தேன். ''மணி

அடித்து முழக்கினால்தான் பூஜை, பக்தி என்று இல்லை. ஆசாரம் என்பது என்ன? மனது, பேச்சு, செயல் இவற்றில் பிறரைத் துன்புறுத்தாது நல்லொழுக்கத்துடன் இருத்தல்தான். நமக்கெல்லாம் கடமை வீட்டில், வெளியில் இரண்டிலும் உண்டு. இதுதான் பூஜை, ஆசாரம் எல்லாம்'' என்று சுகுணாவைத் தேற்றினேன், நான். ''சரி, நீதான் அனாசாரம் கணவனைப் படுத்துகிறது- இந்த ஆசாரக்காரி எப்படியடி கணவனையே பலி கொடுத்தாளாம் என்று கேட்பதுதானே?'' என்றேன்.

''ஐயோ, கேட்டுப் பிழைக்கவா நான்?'' என்று சுகுணா வாய்விட்டுச் சிரித்தாள்.

''சுகுணா, வந்த உயிரைக் கொல்வது பாவம். உனக்கும் பலகீனம். வராமல் இருந்திருக்கலாம். இத்துடன் 'ஃபுல்ஸ்டாப்' வை. கணக்குப் புராஃபஸரான உன் கணவருக்குச் சிவப்பு முக்கோணமும் தெரிந்திருக்க வேண்டும்'' என்ற என் அறிவுரையை அவள் ஒப்புக் கொண்டாள். பின்னர் பிறந்தது. அவன் அத்தைக்குச் செல்லமானான். சுகுணா பிழைத்தாள்.

சாந்தா பத்து நாள் லீவு போட்டுவிட்டு ஒரு முறை பிறந்தகம் செல்ல நினைத்தாள்.

''உனக்கு லீவுதானே? எனக்கும் ரொம்ப நாளாகத் திருப்பதி பத்ராஜலம், ஸ்ரீசைலம், காளஹஸ்தி, திருத்தணி எல்லாம் தரிசிக்க ஆசை. அப்படியே உன் அம்மா வீட்டிலும் மெட்ராஸில் எட்டிப் பார்த்துவிட்டு வரலாம். அவனும் எல். டி. சி. போட்டிருக்கிறான் போல் இருக்கிறதே'' என்று முதலில் மூட்டை கட்டலானாள் அவள் மாமியார். அல்லது '''உங்களுக்குள் வேறு ஏதாவது 'ப்ளான்' இரகசியமாக இருந்தால் இந்தக் கட்டைக்கு ஒரு க்ஷேத்திரமும் வேண்டாம்'' என்று குத்தலுடன் முடித்தாள்.

''எங்களுக்கு ஒரு திட்டமும் இல்லை, அம்மா. முதலில் என் லீவே சாங்ஷன் ஆகவில்லை. வேண்டுமானால் நீங்களும் உங்கள் பிள்ளையும் எல். டி. சி. யில் போய் வாருங்கள்'' என்று அழுகையை அடக்கிக்கொண்டு ஒரு பொய்யைத் தூக்கிப் போட்டு விட்டு, ஆபீசுக்கு வந்துவிட்டாள் சாந்தா. பாவம், பிறந்தக ஆசை முடிந்தது.

எனக்குப் பாவமாக இருந்தது. என்ன செய்வது இவளுக்கு, தான், தன் பிள்ளை; இதுதான் உலகம். தனக்குப் பின்தான் மருமகளுக்கு என்ற தீர்மானம்!

நானும் என்னைச் சுற்றி நடப்பவைகளைப் பார்த்துக் கொண்டும், பேசிக் கொண்டும் தான் இருந்தேன். மாமியார், மருமகள் என்றால்ஏன்இருதுருவங்களாகவேஒருவரை ஒருவர் நினைக்கின்றனர் என்றே புரியவில்லை! ஆனால் மணிக்குக் கல்யாணமாகி நானும் மாமியாரான போது நானும் திண்டாடித் தான் போனேன்.

> ஒரு [illegible] உடன் உள்ளவர்களுடன் ஒப்பிட்டும் பார்த்து [illegible] கொள்ள வேண்டாம். ஒவ்வொருவரின் வாழ்க்கை முறை வேறு. சூழ்நிலை வேறு. அவள் மாதிரி என்னால் ஆக முடியவில்லையே என்று நினைத்தால் [illegible] ஒன்றுதான் மிஞ்சும்.

அன்று ஆபீசிலிருந்து புறப்படும் போதே எனக்கு நல்ல தலைவலி. லதா, என் மருமகள், வீட்டில்தான் இருப்பாள். சூடாகக் காப்பி கலந்து தரச் சொல்லி ஒரு சாரிடானுடன் குடித்துவிட்டு ஒரு தூக்கம் போட வேண்டும். ஓர் ஆட்டோ பிடித்து வீட்டிற்கு வந்தேன். அப்படியும் மணி ஆறாகி விட்டது.

''அம்மா...'' உள்ளே நுழையும்போதே லதா பரபரப்புடன் ஓடி வந்தாள். ''அந்த ஆட்டோவையே இருக்கச் சொல்லுங்கள். இன்று 'லேட்' டாகிவிட்டதே நீங்கள் வரவில்லையே என்று பார்த்துக் கொண்டிருந்தேன். உங்கள் பிள்ளை சினிமாவிற்கு 'புக்' செய்துவிட்டு என்னை நேரே ஆனந்த் தியேட்டர் அருகே வரும்படி போன் செய்தார். உங்களுக்கு ஃப்ளாஸ்கில் காப்பி இருக்கிறது. இரவு சமையல் என்ன என்று புரியவில்லை. சரி, நீங்கள்தான் வந்து விடுவீர்களே, தவிர உங்களுக்குத்தானே என்று சமைக்கவில்லை. நாங்கள் அனேகமாக அப்படியே சிநேகிதர்களுடன் ஹோட்டலுக்குப் போய் விடுவோம்...''

மட மடவென்று ஒப்பித்து விட்டுப் புறப்பட்ட மருமகளை ஏக்கத்துடன் பார்த்தேன். இப்போது நான் ஏதாவது தலைவலி பற்றிப் பேசினால், அவள் வெளியில் போவது பிடிக்காத மாமியார் ஆகிவிடுவேன். என்ன செய்வது? 'நீ எதுவும் செய்' என்பது போல 'ஆட்டோ' புறப்படும் சப்தம் கேட்டது. கூடையிலிருந்த கத்தரிக்காய் என்னைப் பார்த்துச் சிரித்தது. ஆபீஸ் சென்றிருக்கும் கணவர் வருமுன் ஏதாவது செய்தாக வேண்டும். தூக்கமும், தூங்கி எழுந்து மிளகு ரசம் சாப்பிடும் ஆசையும் அடங்கிப் போயின!

''வெளியில் நான் புறப்பட்டு விட்டாலே போதும். 'ஒரு கறி வதக்கி ரசம் வைத்து விட்டுப் போ' என்பார் என் மாமியார். என் 'மூடே' அவுட் ஆகிவிடும்'' என்று சாந்தா என்றோ கூறிய குரல் என் காதருகே கிசுகிசுத்தது; எச்சரித்தது.

''அம்மா — எல். டி. சி. எடுத்து இருக்கிறேன். இந்தக் கோடை வெயிலுக்கு இரண்டு நாள் 'ஜம்'மென்று பெங்களூரில் இருந்து விட்டு, மைசூரெல்லாம் பார்த்து வரலாம் என்று நினைக்கிறேன்...'' — மணி ஒளிவு மறைவின்றி பளிச்சென்று கூறினான்.

''பங்களூரா?'' — நாமும் பெண் வீட்டிற்கு நாலைந்து நாட்கள் போகலாமா என்ற ஆசை அடிநெஞ்சில் துளிர்த்தது.

பூனைக்குட்டியை மடியில் கட்டிக்கொண்டது போல் இந்தக் கிழத்தையும் இழுத்துக்

# 2,00,00,000

# கோடிக்கு மேற்பட்ட வாசகர்களின் விருப்பம்



ஆங்கிலத்தில் பேசிப் பழகிடவே
சிறந்த ஒரு ஸோர்ஸ்
ரேபிடெக்ஸ் இங்கிலீஷ் ஸ்பீக்கிங் கோர்ஸ்

ஸேல்ஸ்மென், வியாபாரி
மானேஜர், குமாஸ்தா
ஒர்க்கிங் கர்ல், இல்லத்தரசி
யாவருமே முன்னேற
எது நல்ல ஸோர்ஸ் ?
ரேபிடெக்ஸ் இங்கிலீஷ் ஸ்பீக்கிங் கோர்ஸ்



## It's really a good book to learn spoken English

—Kapil Dev

கான்வெண்டில் படித்த மாணவர் போல தடதட வென்று சரளமாக ஆங்கிலத்தில் பேசக் கற்பிக்கும் புத்தகம். பாரதமெங்கும் பல்வேறு மாநில மக்கள் விரும்பி வரவேற்கும் அருமையான புத்தகம்.

11 மொழிகளில் வெளி
யிடப்பட்டது.

பெரிய
அளவில் 400 க்கும்
அதிகமான பக்கங்கள்.
விலை: ரூ. 24/-
தபால் செலவு
ரூ.5/ —

**AVAILABLE AT:**
Leading bookshops, Higginbotham's
Railway Book Stalls or ask by
V. P. P. from



**PUSTAK MAHAL**
Khari Baoli, Delhi-110006.
10-B, Netaji Subhash Marg, N.Delhi-110002.

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றுடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது. அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது. காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




**23**

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

| | |
|---|---|
| புரதம் | ரிபோ |
| கொழுப்பு | ஃப்ளேவின் |
| கார்போ | நிகோடி |
| ஹைட்ரேட் | னமைடு |
| கால்ஷியம் | கால்ஷியம் |
| பாஸ்பரஸ் | பேன்டோதெனேட் |
| சோடியம் | கோலின் |
| குளோரைடு | பைரிடாக்ஸின் (பி6) |
| (மி வடிவில்) | வைட்டமின் (பி12) |
| பொட்டாஷியம் | ஃபாலிக் அமிலம் |
| இரும்புச்சத்து | வைட்டமின் சி |
| அயோடின் | வைட்டமின் டி |
| வைட்டமின் 'ஏ' | வைட்டமின் ஈ |
| வைட்டமின் 'பி1' | வைட்டமின் கே |

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான்® — திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

BB4. GLC. 120 Tm

கொண்டு என்ன பயணம் வேண்டியிருக்கிறது என்று லீவைக் 'கான்ஸல்' செய்துவிட்டேன்'' என்று முன்னொரு நாள் சாந்தா கூறியது என் செவிகளில் அறைந்தது.

''அப்படியா? ஹோட்டலில் தங்குவாயா? சரசு வீட்டிற்குப் போவாயா?''

''ஓட்டலில் 'புக்' பண்ணச் சொல்லி முன்பே...'' லதா தொடங்கும் முன் ''ஓ, சரசுவைப் பார்க்கலாமா...?'' என்று குறுக்கே விழுந்து மறித்தான் மணி, நாசூக்காக.

ஜாக்கிரதையாகப் போய் வாருங்கள்.. கௌரவமாக என் அனுமதியை வழங்கினேன்.

**நா**ட்கள் ஓடின. சாந்தா பிள்ளை குட்டிக்காரியாகிக் குழந்தைகளைப் படிப்பு வசதிக்காக மாமியாரிடம் விட்டிருந்தாள். ரமாவின் கணவன் மாற்றலாகிப் போகவே, அவள் தன் வேலையை விட மனமில்லாமல் குழந்தைகளுடன் தனியாகத் திண்டாடிக் கொண்டிருந்தாள்.

இன்னும் பல புதிய முகங்கள், புதிய அனுபவங்கள், எது எப்படியானாலும், 'பெண் உரிமை' என்பதன் முழுப் பொருள் மட்டும் புரியாததாகத்தான் இருக்கிறது.

பெண் கணவனுடன் தனித்து வாழ்வது நலமா, கூட்டுக் குடும்பம் நல்லதா? பெண் உத்தியோகம் பார்ப்பதா, பார்க்காமல் இருப்பது நல்லதா? சம்பாதித்தால் அப்பொருளில் யாருக்கு உரிமை — பெண்ணுக்கா, கணவனுக்கா, புக்ககத்தினருக்கா, பிறந்தகத்தினருக்கும் உண்டா?

இவையெல்லாம் பட்டி மண்டபம் நடத்த மட்டுமே ருசியான தலைப்புகளாக இருந்தன. அதிலும் யாரும் தெளிவாக, உறுதியாக, உண்மையாக முடிவு கூறவில்லை. வானிலை அறிக்கை போல இப்படியும் இருக்கலாம், அப்படியும் செய்யலாம் என்றுதான் வழவழத்தனர்.

என் காலம் ஓடிவிட்டது. இரண்டு பேரும் வேலையிலிருந்து ஓய்வு பெற்றோம். மணி நல்ல வேலை கிடைத்து லதாவுடன் பம்பாயில் இருந்தான். அடுத்தவன் ஜெர்மன். இரு பெண்களும் இந்தியாவில்தான் இருந்தனர். ஆனால் அங்கெல்லாம் போய் இருக்க முடியுமா? எனக்கு ஆலோசனை சொல்வார் யார்? நான் குழம்பிக் கொண்டிருந்தேன். ஆயிரம் பேருக்கு ஆலோசனை சொன்ன எனக்கு இன்று ஆறுதல் சொல்ல யாருமில்லை.

அன்று திடீரென்று சாந்தா வந்து நின்றாள். ''பாருங்கள், மிஸஸ் ராஜ்... என் மைத்துனர்களில் ஒருவர் 'இல்லறம்' (வேட்டகவாசம்) இருவர். வெளிநாட்டில் அதனால் நான் மீண்டும் கொத்தடிமையாகிறேன். இப்போது நாகரிகமாக வளர்ந்து விட்ட என் பெண், பிள்ளைகள் வேறு. பாட்டியின் கட்டுதிட்டங்களுக்கு எதிர்க்கொடி உயர்த்தாமல் இருக்க வேண்டும். என்ன செய்யப் போகிறேனோ. என் மாமியாரை அழைத்துக் கொண்டு போய் வைத்துக் கொண்டு, நான்...''

''என்ன செய்வது சாந்தா! வயதானவள். மாமனாரும் இல்லை...'' நான் தயங்கியபடி கூறினேன்.

அவளுடைய மாமியாருக்கு ஆதரவாகப் பேசும் என்னை ஆச்சரியத்துடன் பார்த்தாள். நான் சமாளித்துக் கொண்டு, ''பாவம், உனக்கும் சிரமம்தான்'' என்றேன்.

''இத்தனை பயந்து பயந்து நான் மாமியாருக்குச் செய்கிறேனே. எனக்கு வரும் மருமகள் எனக்குச் செய்வாளோ இல்லை நான்தான் அவளுக்கும் பயப்பட வேண்டியிருக்குமோ...!'' சாந்தாவின் சிந்தனை வெகுதூரம் ஓடிய போது 'பளிச்' சென்று எனக்கு ஒரு யோசனை தோன்றியது.

''சாந்தா, பிள்ளைக்குக் கல்யாணமானால் முதலிலேயே தனியாக வைத்துவிடு. கசப்பு வந்து பிரிவதை விட இது நல்லது. தூரத்துப் பச்சை கண்ணுக்கும் குளிர்ச்சி. நான் கிழமைகளில் ஒன்று கூடுவது இன்பமாகக்கூட இருக்கும்.''

என்னுடைய இந்தப் பதிலே திடீரென்று என்னுள் ஓர் ஒளியையும் பாய்ச்சியது. அடுத்து நான் என்ன செய்ய வேண்டும் என்று தெளிவு பிறந்தது.

''அன்புள்ள மணிக்கு,

நாங்கள் ஓய்வு பெற்று விட்டாலும் பழகிய இடம், வீட்டை விட்டுப் புறப்பட மனம் இல்லை. நீ அங்கு வந்து இருக்கும்படி அழைத்திருப்பது மகிழ்ச்சியாகவே இருக்கிறது. ஆனால் இந்த 'ஹெட்குவார்ட்டர்'ஸைக் கலைக்க விருப்பம் இல்லை. இஷ்டப்படி மற்ற பெண், பிள்ளைகள் வந்து எங்களுடன் தங்கிப் பழக இதுதான் வசதி. முதலில் நானும் அப்பாவும் குமரி முதல் ஹரித்வார் முடிய ஒரு சுற்றுலா செல்லத் திட்டம். அதில் இடையில் பம்பாய்க்கும் ஒரு வாரம் ஒதுக்கி இருக்கிறோம்... மற்றவை பின்பு... உன் அம்மா''

மணிக்கு நான் எழுதிய கடிதத்தைக் கண்டு 'டிப்ளமாடிக்காக' பிரச்னையைத் தீர்த்து முடிவெடுத்து விட்டாயே' என்று பாராட்டினார் என் கணவர்.

நான் சாந்தாவிற்கு மனத்திற்குள் நன்றி கூறினேன்.

தனித்தனி தீவாக இருக்காமல் இரவு நேரங்களிலாவது ஒன்று சேர்ந்து சாப்பிடுவது என்ற கொள்கை வேண்டும். அனுதாபத்துடன் எதையும் அணுகும் சுபாவம், ஒத்துப் போகும் தன்மையும், மதிப்பும், மரியாதையும் போன்ற குணங்களை குழந்தைகளின் மனத்தில் பதிய வைக்க வேண்டும். அப்பொழுதுதான் குழந்தைகள் பெரியவர்களை மதித்து, பெற்றோரை மதிக்கும் நிலை வரும்.

## ஃபாரெக்ஸ்®
## முதலான விருப்பம்!

# பாப்பா வளர்ச்சிக்கான திட உணவுகளில் பாசத்தாய் அளிக்கும் முதலிடம் ஃபாரெக்ஸ்®

தாய், தன் குழந்தைக்கு தேர்ந்தெடுக்கும் முதலான திட உணவு புதிய செழுமையான ஃபாரெக்ஸ். காரணம்:

பாப்பாவின் உடல் நலத்திற்கான புரதமும், ஜீரணத்திற்கு உகந்த கொழுப்புச் சத்தும் சரியான அளவில் கொண்டது.

பாப்பாவுக்கு ஆரோக்கியமான ரத்தத்தை தரவல்ல இரும்புச் சத்துள்ளது.

எலும்பும் பற்களும் வலுவோடு வளர்ந்திட கால்சியமும் ஃபாஸ்ஃபரஸும் 2:1 என்ற அளவில் சேர்க்கப்பட்டது.

தின்னத் தெவிட்டாதது; கலப்பதும் கொடுப்பதும் எளிது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து
கொடுத்தாலே
போதும்.

**தாயன்பைக் கூறிடும்**
**தரமிக்க திட உணவு ஃபாரெக்ஸ்®**

CLARION/B/GX/15/203




மஞ்சுளா ரமேஷ்

''கொஞ்சமாச்சும் உனக்குப் புத்தி இருக்குதா? உங்க ஆயாகிட்ட காக கேக்காதேன்னு சொன்னேனில்லே? அவளானா அவ வூட்டுச் சொத்த வாரி கொடுத்தா மாதிரி லபோ லபோன்னு கத்தறா. உங்கப்பனானா குடிச்சுட்டு வந்து 'கம்'னு படுத்துக்கினுகிறான். நீ என்னடான்னா பன்னாடை மாதிரி அவகிட்ட போய் நிக்கறியே…''

ஒரு தாய் புலம்பிக் கொண்டே வந்ததைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தால் 'தர தர'வென தன் பையனை இழுத்துக் கொண்டு அவள் என்னைக் கடந்தாள். தன் மாமியாரின் மீதும், கணவனின் மீதும் இருந்த ஆத்திரமெல்லாம் 'நறுக்'கென குட்டாக விழுந்தது.

அந்தப் பையனுக்கு இரண்டரை வயதுக்கு மேல் இருக்காது. அவன் தோளையும், சட்டையையும் சேர்த்து இழுத்துக் கொண்டு போனதில் தலை தொங்க அழுது கொண்டே போனான் அவன்.

எதற்கெடுத்தாலும் அடிப்பது, சிடுசிடுப்பது, கையில் எது கிடைத்தாலும் வைத்து சாத்துவது இவையெல்லாம் வாழ்வில் துன்பப்படும் பெண்களின் வாடிக்கை. தன்னுடைய வாழ்க்கை நன்றாக அமையாதவர்களின் ஆத்திரங்களுக்கு எல்லாம் வடிகால் எதிர்க்கச் சக்தியற்ற அந்தக் குழந்தைகள்தான்.

படிக்காத பெண்கள் என்றில்லை, படித்த பல பெண்களிடையே கூட இப்படிப்பட்ட பழக்கங்கள் உண்டு. தன் வெறுப்பையெல்லாம் குழந்தைகளின் மீது காட்டுவார்கள்.

எதிர்க்கச் சக்தியில்லாதவரை சித்ரவதைப் படும் அந்தக் குழந்தைகள், ஒரு குறிப்பிட்ட வயது வரும்போது திருப்பிக் கொள்கிறார்கள். படிக்காது முரடனாக வளரும் இளைஞன், தாயைப் போட்டு மொத்துகிறான். படித்த இளைஞன் பெற்றோரின் மீது பாசமேயில்லாமல் வளருகிறான். முடிந்தால் வயதானவர்களின் விடுதியில் கொண்டு போய்த் தள்ளுகிறான்.

பெற்றோர் குழந்தைகளின் உறவே தாய் தன் குழந்தைகளை வளர்ப்பதில்தான் இருக்கிறது. பல குடும்பங்களில், ''உங்கப்பனாட்டமே இருக்காதே!''

என்பார்கள். தன் கணவனிடம் இருக்கும் குறைபாடுகளையெல்லாம் விலாவாரியாக எடுத்துரைப்பார்கள். இதனால் தந்தையின் மீதும் மதிப்பு குறைந்து, தாயின் மீதும் எரிச்சல் பட்டு குடும்பமே கசக்கிறது குழந்தைகளுக்கு.

இதே குழந்தைகள்தான் தங்களுடைய தேடலுக்கு ஒரு முடிவைக் காண விரும்புகிறார்கள். குடும்பத்தில் அமைதி கிடைக்காத குழந்தைகள் சிகரெட் பிடிப்பது, கஞ்சா அடிப்பது என மாறுகிறார்கள்.

பெற்றோர் குழந்தைகளின் உறவே, சமுதாய உறவாகவும் மாறுகிறது. ஒரு குழந்தை பெரியவனாகி சமுதாயத்தில் பொறுப்புள்ள பிரஜையாக மாற வேண்டுமானால் அவனுடைய இல்லம் அவனுக்கு நல்லவைகளைக் கொடுத்திருக்க வேண்டும். அவன் வீட்டில் என்ன பெறுகிறானோ அதையே வெளியில் கொடுக்கிறான்.

மாமியார், மருமகள், நாத்தனார், மைத்துனர்கள் என்ற உறவுகளுக்கெல்லாம் மனோ தத்துவ அடிப்படையில் எவ்வளவோ காரணங்களைக் கூறுகிறார்கள்.

''மாமியார் தன் மகனைத் தன்னிடமிருந்து பிரிக்க வந்தவளாக மருமகளை நினைக்கிறாள்.

நாத்தி, ''தான் இளைய ராணியாக வலம் வந்தது போய் புதிய பட்ட மகிஷி வருகிறாள் எனவே தாயுடன் சேர்ந்து கொண்டு அவளுடைய பதவியும், தன் செல்வமும் போகாமல் இருக்க சதி பண்ணுகிறாள்.

என்றெல்லாம் காரணங்களை அடுக்குகிறார்கள்.

வெளியுலகில் பல சாதனைகளைச் செய்பவர்கள் எல்லாம் வீட்டில் வெற்றியடைவதில்லை. குடும்பம முழுக்க அழுகையும், குற்றச்சாட்டுக்களுமே நிறைந்துவிடுகின்றன.

கூட்டுக் குடும்பமா, தனிக் குடித்தனமா, கணவனா மனைவியா யார் உசத்தி என்றெல்லாம் நான் முழுக்க பேசலாம். நிறைய படிக்கலாம். ஆனால் நடைமுறை வாழ்க்கை என்று வரும்போது, அனுபவங்களால் அடிபடும்போதே பலருக்கு ஞானோதயம் பிறக்கிறது.

ஆனாலும் முன்னெச்சரிக்கை செய்யலாம். அது பாசி, வழுக்கும் எனச் சொல்லலாம். நெருப்பு சுடும் என அறிவுரைக் கூறலாம். தீயவை, நன்மையைப் பிரித்துக்கூறும் கடமையை நல்லவர்களுக்குச் சமுதாயம் அளித்திருக்கிறது.

எது எப்படியானாலும் வாழப் போவது ஒரு வாழ்க்கை. அதை மன நிம்மதியுடன், மகிழ்ச்சியுடன் வாழ வேண்டும். அந்த மன நிம்மதியும், மகிழ்ச்சியும் எப்படி வாழ்ந்தால் நமக்குக் கிடைக்கும் எனக் கேள்வியை உங்களுக்குள் எழுப்பிக் கேளுங்கள்.

விடை கிடைக்கும்.

2 3 4 5

# Now HINDUSTHAN FINANCE Can turn you into a financial genius in FIVE different ways.

1. Fixed Deposits guaranteed by registered mortgage deed.
2. Short term notice deposits.
3. Fixed deposit guaranteed by Cash Certificate From Government owned public Limited Companies
4. Fixed Deposit guaranteed by Bank Cash Certificate.
5. 3 year Cumulative time Deposit.

**HINDUSTHAN FINANCE :**

In 7 years of dedicated service HINDUSTHAN FINANCE have built up an enviable reputation as investment consultants and trustees, mortgage financiers, approved layout promoters township elevators and estate agents. They will protect your investments by providing 100% security.

The Company started business with a Simple goal-promoting savings amongst people. They have succeeded admirably. Today they offer unique investment schemes for small medium and big investors.

**1. FIXED DEPOSITS GUARANTEED BY REGISTERED MORTGAGE DEED SCHEME.**

**LAND ON AN OPPORTUNITY OF A LIFETIME.**

A unique Scheme-introduced for the first time in India. This Scheme protects it with a Registered Mortgage of a Government approved Housing Plot. Remember your guaranteed plots will go up in value several times by the time of maturity which means maximum protection to your investment.

| Nature of deposit | period of deposit | Rate of interest |
|---|---|---|
| Fixed Deposit | 12 months | 15% |
| Fixed Deposit | 18 months | 18% |
| Fixed Deposit | 24 months | 20% |
| Fixed Deposit | 36 months | attractive interest. |

**2. SHORT TERM NOTICE DEPOSIT SCHEME.**

**MONEY GROWS IN NO TIME AT ALL**

The minimum deposit is Rs. 1000/- to be deposited for 70 days/160 days Under this scheme the depositor can get back the deposit only after a minimum period of 2/6 months after giving notice of 70 to 160 days respectively.

**3. YOUR DEPOSITS GUARANTEED BY CASH CERTIFICATE FROM GOVERNMENT OWNED COMPANIES**

**FIRST TIME IN INDIA**

Your fixed deposit is guaranteed by cash certificate from government owned public limited companies. This unique short term scheme has been introduced for the first time. Under this scheme the principal will earn interest at 20% p.a. payable monthly.

**4. YOUR FIXED DEPOSIT GUARANTEED BY BANK CASH CERTIFICATE**

**'BANK ON GOOD RETURNS'**

Make a minimum deposit of Rs. 5,000/- and get a cash certificate in your favour from a Nationalised Bank of your choice. The repayment of your deposit after maturity is guaranteed.

## 100% Security

## only HINDUSTHAN FINANCE

**Guarantees your investment**

**We don't Advertise 100 times to make our point**

**Our Depositors Come Invest and feel secure! Do we need to say more?**

**5. 3 YEAR CUMULATIVE TIME DEPOSIT SCHEME.**

An attractive scheme which any depositor would love to avail of.

The people behind financial miracles, Hindusthan Finance have with vision and foresight, become a name to reckon with. Hindusthan Finance are pioneers in this field of activity.

Come to Hindusthan Finance because only we can play the role of investment trustees to perfection.

I want to turn into a financial genius. Rush me information on

- Fixed Deposits guaranteed by registered mortgage deed.
- Short term notice deposit Scheme.
- Your Fixed Deposit guaranteed by Bank Cash Certificate
- 3 year Cumulative Time Deposit Scheme.
- Your Deposit guaranteed by Cash Certificate from Government owned Companies

Name __________

Address __________

For Details contact :

## HINDUSTHAN FINANCE

**12, Ramaswamy Street, Theagaraya Nagar, Madras-600 017. Phone : 441448.**

SATURDAY HOLIDAY SUNDAY WORKING DAY

வரதட்சணைக் கொடுமையால் மருமகள் எரிப்பு என்றெல்லாம் வருகிறதே! இங்கே இன்னொரு பக்கத்தையும் சொல்கிறேன், உணர்ந்து கொள்ளுங்கள் என்கிறார் கட்டுரை ஆசிரியர்.

அந்த இளம் டாக்டருக்குத் திருமணமாகி எட்டு ஆண்டுகள் ஆகின்றன. இரண்டு குழந்தைகள் முறையே 6, 1½ வயதுகளில். சிறிய மனத்தாங்கல் இரவில் ஏற்பட்டு இருக்கிறது. டாக்டர் அதைப் பெரிதாக நினைக்கவில்லை. மறுநாள் அதிகாலையில் எழுந்து, மனைவி தூங்கிக் கொண்டிருந்த காரணத்தால் கீழே அவர் நடத்தும் 'கிளினிக்'கிற்குச் சென்று விட்டார். எழுந்து பார்த்த மனைவி தன்னை, கணவர் அசட்டை செய்து விட்டதாகக் கற்பனை செய்து கொண்டு, பாத்ரூமிற்குச் சென்று, தன் மீது கெரசினை ஊற்றிப் பற்ற வைத்துக் கொண்டாள். தீ பற்றியதும், பாத்ரூமிற்கு வெளியே வந்து கத்தியிருக்கிறார்.

சத்தம் கேட்டு ஓடிவந்து டாக்டர் தம் மனைவியைக் காப்பாற்ற முயன்றதில், இவருடைய முகத்திலும், ஒரு கை முழுவதும் பலத்த தீக்காயங்கள். மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட டாக்டரின் மனைவி அன்றிரவே இறந்து போனார். இறப்பதற்கு முன், மயக்கம் தெளிந்தவுடன், "அவசரப்பட்டு விட்டேன். என் தோல் கருகி விட்டதே. சரியாகி விடுமா, கண் வந்துவிடுமா?' என்றெல்லாம் அந்தப் பெண் புலம்பியிருக்கிறார்.

பத்திரிகையிலும், சினிமாக்களிலும், மாமியார் அல்லது கணவன் கொடுமைப் படுத்துவது, எரிப்பது போன்ற நிகழ்ச்சிகள் பரவலாகக் காணப்படுவதால், விபத்து நடந்த ஒரு வீட்டில், பெண் இறந்து விட்டாலும், அல்லது டாக்டரின் மனைவி போன்ற அவசர முடிவு எடுக்கும் பேதமை நிறைந்த பெண்கள் இறந்து விட்டாலும், அந்த வீட்டின் தலைவனைத்தான் எல்லோரும் குற்றப் பார்வை பார்க்கிறார்கள். பெண்ணின் வீட்டார்கள் உடனே மருமகன்தான் தன் மகளைக் கொன்றதாகக் கூறுகிறார்கள். போலீஸாரின் கேள்விகளோ உயிரைத் துளைக்கும் அம்புகள்.

# இன்னொரு பக்கம்



* அன்னமிடும் கையே ஆதாரம்!

இங்கு இறந்துவிட்ட சகோதரிக்குத் தன் கணவன் மீது கோபம் இருந்தாலும், 'நாம் போய் விட்டால் குழந்தைகள் என்ன செய்வார்கள்?' என்று சிறிதுநேரம் சிந்தித்து இருக்கலாம். மனைவி இறந்த துக்கம், குழந்தைகளும், தாமும் தனித்து இயங்கப் போகும் வெறுமையான எதிர்காலம், எல்லாவற்றுக்கும் மேலாக விவரமறியாத இந்தக் குழந்தைகள் எதிர்காலத்தில் தன்னைக் கேட்கப் போகும் கேள்விகள், என்று டாக்டர் வருந்துகிறார்.

இந்தக் காலத்தில் பெற்றோர்கள் தம் குழந்தைகளை வளர்க்கும்போது தவறு புரிந்து விடுகிறார்கள். முக்கியமாகப் பெண்களுக்கு அதிகம் செல்லம் கொடுப்பது. அவர்கள் விருப்பத்தை எல்லாம், முடிந்தாலும், முடியாவிட்டாலும்நிறைவேற்றுவதுபோன்றசெயல்களினால் அவர்களின் பிடிவாதத்தை வளர்த்து விடுகிறார்கள். நினைத்ததைச் செய்து முடித்துக் கொள்ளும் குழந்தை, பெரியவளானதும், பிடிவாதக்காரியாக வளர்ந்து விடுகிறாள்.

புகுந்த வீடு செல்லப் போகும், சமீபத்தில் சென்றிருக்கும், சென்று பல ஆண்டுகள் ஆகப் போகும், சகோதரிகள் தன்னுடைய நோக்கிலேயே எதையும் சிந்திப்பதைத் தவிர்ப்பது நல்லது. கல்யாணமான ஒரு பெண் தனியாள் அல்ல. அவள் மனைவி, குழந்தைகளுக்குத் தாய். எனவே பெரிய முடிவுகள் ஏதேனும் எடுக்க நேரும் போது இதனால் குடும்பம் எப்படிப் பாதிக்கப்படும் எனச் சிந்திப்பது நல்லது. மனத்துக்கு மிகவும் கஷ்டமாக இருக்கும் போதும், பிரச்னைகள் அதிகமாக நம்மை வாட்டும் போதும், நம் பக்கம் நியாயம் இருக்கும்போது, அநியாயத்தைக் கண்டு நமக்குள் கோபம் பொங்கும் போதும் உங்களுக்கு விருப்பமான தெய்வத்தின் திருநாமத்தை (கணக்கின்றி) எழுதிக் கொண்டிருங்கள்.

தெய்வ நம்பிக்கை இல்லாத சகோதரிகள், அந்த மாதிரி மனம் கஷ்டப்படும் நேரத்தில், வெளியே சென்றுவிட்டு வரலாம். இயற்கையை ரசிக்கலாம். மழலைகளிடம் கொஞ்சலாம். மனம் விட்டு நெருங்கியவர்களுடன் பேசலாம்.

விபரீத முடிவு எடுத்து இருந்தால், சில நாட்கள் ஒத்திப் போடலாம். மனமும் மாறலாம். வெளிநாட்டில் தற்கொலை செய்வதற்கு முன் குறிப்பிட்ட நம்பருக்கு டயல் செய்தால், சில நிமிடங்களில், தற்கொலை எண்ணம் மாறும் அளவு இதமாகப் பேசுவார்களாம். அதுபோல் இங்கும் நம் மாதர் சங்கங்கள், திறமையாக, இதமாகப் பேசும் பெண்களைத் தேர்வு செய்து, இதுபோல், நேரிலோ தொலைபேசி மூலமோ பேசி பெண்களின் மனத்தை மாற்றலாம்.

பெண்களின் பொறுப்பு மிகப் பெரியது. அவள் விட்டுக் கொடுக்கிறாள் என்றால் அதற்கு அடிமைத்தனம் என்று பெயரில்லை. வெளியுலகில் நாம் எப்படிச் சிலவற்றை விட்டுக் கொடுக்கிறோமோ அதுபோல வீட்டிலும் கொஞ்சம் விட்டுக் கொடுப்பதால் தவறில்லை.

— பிரேமா

---

# இம்மாத இல்லத்தரசி போட்டி

பொருள் : தோசை. கடைசி தேதி : 15.4.86

## சமையல் கூப்பன்

.................... என்று தலைப்பில் சமையல் குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். இச் சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும், எந்தப் புத்தகத்திலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

# வாய் புத்துணர்ச்சி பெற கிராம்பை மெல்லுதல் பண்டை காலத்திலிருந்து வரும் ஒரு பழக்கம்

---



சீனாவில் அரசவைக்குச் செல்லுகையில் அரசவையினரும் அதிகாரிகளும் அவர்கள் சுவாசத்தில் மணமும், புத்துணர்ச்சியும் பெறுவதற்கு கிராம்பை மென்று வந்தனர் என்று கூறுவதுண்டு. அதே கிராம்பு, இன்று ப்ராமிஸ் டூத்பேஸ்ட்டின் ஒரு மிக முக்கிய பொருளாகத் திகழ்கிறது. ப்ராமிஸ் கொண்டு பிரஷ் செய்திடும்போது, உங்கள் சுவாசத்திலும் சீன அரசவையினர், அதிகாரிகள் போன்றே மணமும், புத்துணர்ச்சியும் பெறுவீர்கள். இதுவே கிராம்புத் தைலத்தின் மகிமை. ப்ராமிஸ்ஸின் ஒப்பற்ற ஃபார்முலா உங்கள் வாயிலும், சுவாசத்திலும் துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை வீழ்த்துகிறது. சுவாசத்தில் புத்துணர்ச்சி வழங்குகிறது. அதோடு அன்றி, கிராம்புத் தைலத்தின் இதர குணம் உங்கள் பற்களின் இடுக்குகளில் புகுந்து, பற்களின் வேர்வரை சென்று பலவீனப்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது. இவைகளிலிருந்து விடுதலை பெறுவதனால் உங்கள் பற்கள் ஆரோக்கியமாயும், உறுதியாயும், பளபளப்பாயும் திகழ்கின்றன. சுவாசம் புத்துணர்ச்சி பெற்று மணம் வீசுகிறது. இப்போது நீங்களும் எந்த ராஜாவின் சபைக்கோ அல்லது ராணியின் சபைக்கோ முழு நம்பிக்கையுடன் செல்ல முடியும்.






**Promise**

கிராம்புத் தைலத்தின் அருமையான படைப்பு—ப்ராமிஸ் டூத் பேஸ்ட்

பல்ஸாரா—
டூத்பேஸ்ட் நிபுணர்கள்.

CHAITRA - B BLS 852 TAM

**இலவசம்**

# சட்னி கிரைண்டர்




மிக்ஸியுடன் ரூ. 110/- மதிப்புள்ள

# சட்னி கிரைண்டர்

- 1 மணி விடாமல் இயங்கும் சக்தி வாய்ந்த 450 வாட்ஸ் மோட்டார்
- 2 வருட உத்திரவாதம்
- ஆயுள் கால இலவச சர்வீஸ்

குறுகிய கால வாய்ப்பு
அதிக பட்ச விலை ரூ. 1,200

ஏதோ ஒரு மிக்ஸி அல்ல — இது ஒரு ttk தயாரிப்பு

# ஓய்வு பெற்ற கணவருக்கு...



"காலையில் எழுந்து பஸ்ஸைப் பிடிச்சு ஆபீஸ் போயி, நாளெல்லாம் மாடு மாதிரி உழைச்சு, சாயங்காலம் நெரிசலில் பிதுங்கி, வீட்டுக்கு வந்து சேர்றதுக்குள்ளே பிராணனே போறது. எப்படடா இந்த ஆபீஸை விடுவோம் அப்படீன்னிருக்கு" — என்று பலர் அலுத்துக் கொள்வதைக் கேட்டிருக்கிறோம். இவர்களில் எத்தனை பேர் ஓய்வு பெறும் போது மகிழ்ச்சியடைவார்கள்!

ஒவ்வொரு மனிதனின் வாழ்விலும் வேலை, யில் இருந்து ஓய்வு பெறுவது என்பது ஒரு திருப்புமுனை. பெண்களுக்கு, அதுவும் வீட்டிலே இருக்கும் பெண்களுக்கு ஓய்வு பெறும் வயதென்பதே இல்லையாதலால் அவர்கள் எப்போதும் உழைத்துக் கொண்டுதான் இருக்க வேண்டும் என்பது வேறு விஷயம். ஆனால் ஓய்வு பெற்ற தன் கணவரைக் கவனித்துக் கொள்வது என்பது பெரிய விஷயம்.

முப்பது முப்பத்தைந்து வருடங்கள் ஒரே நேர்க்கோட்டில் இருந்துவிட்டு ஒருநாள், "இன்றுடன் நீ வேலை பார்த்தது போதும், ஓய்வு எடுத்துக் கொள்" — என்றால் பலரால் இதைத் தாங்க முடிவதில்லை. எனக்குத் தெரிந்த ஒருவர் ஓய்வு பெற்ற வாழ்க்கையை ஒப்புக் கொள்ள முடியாமல் மனநோயாளியாகி தினமும் காலையில் ஆபீஸ் வாசலில் போய் ஒரு தடவை நின்றுவிட்டு வருவார்.

ஓய்வு பெற்றவர்கள் மனோரீதியாக பாதிக்கப்படுகிறார்கள். ஓய்வுபெற்றவரின் மகன்கள் பெரியவர்களாக இருப்பார்கள். ஓடி ஓடி உழைக்க வேண்டிய நிலையில் இருப்பவர்கள். இவருக்கு நிறைய நேரம் இருக்கும். தான் மட்டும் சும்மா உட்கார்ந்திருக்க, மற்றவர்கள் ஓடுவதால் எரிச்சல் வரும். இவர்கள் தன்னை மதிப்பதில்லை என ஆத்திரம் வரும். பெரும்பாலும் இது மனைவியின் மேல் கோபமாக உரு மாறுகிறது.

இந்தத் தாழ்வு மனப்பான்மையை மறைக்க தானும் உயர்ந்தவன்தான் எனக் காட்டிக் கொள்ளத் தன் அந்தக் கால அனுபவங்களையும் ஆபீஸில் தான் வேலைசெய்ததைப்பற்றியும் எல்லோரிடமும் சொல்ல ஆரம்பிப்பார்

அதைக் கேட்க யாருக்கும் நேரம் இருக்காது.

சாதாரணமாக மனைவி ஏதாவது செய்யச் சொன்னால் கூட "நான் ஒன்றுக்கும் உபயோகமில்லாதவன். அதனால் என்னை வேலை வாங்குகிறாயா?" என்று சீறுவார்கள். இந்த மாதிரி சமயங்களில் மனநோயாகி விடும் விடும் கணவனைச் சரிப்படுத்த முயல வேண்டியது மனைவியின் கடமைதான். ஐம்பது வயதில், இவர்களும் ஓய்வு இல்லாமல் வேலைக்குப் போகும் மகன், மருமகன், பள்ளிக்குப் போகும் பேரக் குழந்தைகள் என அலைவார்கள். கணவனும் நச்சரிக்க ஆரம்பிக்கும்போது கஷ்டம்தான். எனினும் மெதுவாகச் சிக்கலைப் பிரிக்க முயலும் போது குடும்பமும் அவனுடன் ஒத்துழைக்க வேண்டும்.

எப்படியும் தாம் ஓய்வு பெறப் போகிறோம் எனத் தெரியும். அதற்கு மனத்தைத் தயார்ப்படுத்திக் கொள்ளலாம். மனைவியை அழைத்துக் கொண்டு நிம்மதியாகக் காசி, ராமேஸ்வரம் போகலாம். நிறையப் புத்தகங்கள் படிக்கலாம், பாட்டு கேட்கலாம் என்று ஆவலுடன் எதிர்பார்க்கலாம்.

பழைய நண்பர்களைச் சந்தித்துக் கடந்த கால நினைவுகளைப் புதுப்பித்துக் கொள்ளலாம். வீட்டில் இத்தனை நாள் செய்யாத சின்னச் சின்ன வேலைகளைச் செய்யலாம்.

அப்படிச் செய்வது தம்முடைய கௌரவத்திற்கு இழுக்கு என நினைப்பது தவறு. இத்தனை நாள் குடும்பத்திற்காக உழைத்த மனைவியுடன் நட்புறவை வளர்த்துக் கொள்ளலாம். தோட்டம் போடுதல், பேரக் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தல் என குடும்பத்தாருடன் நட்புறவுடன் செல்ல வேண்டும். 'இன்னும் தானே வீட்டுத் தலைவன்' எனக் கிரீடத்தை வைத்துக் கொண்டிருக்கும் போதுதான் பிரச்னைகள் வரும். புதிய தலைமுறையோடு ஒத்துப் போவதால் மீதமுள்ள வாழ்வை நிம்மதியாகக் கழிக்கலாம்.

ஓய்வு பெற்றவர்களுக்குக் கூடுமானவரை வீட்டில் இதமான சூழ்நிலையைத் தர வேண்டியது மற்றவர்களின் கடமையும் கூட. இதில் மனைவியின் பங்கு ரொம்ப முக்கியமானது. அவர் உபயோகமில்லாது போய் விடவில்லை. ஆபீஸ் தொல்லைகளிலிருந்து விடுபட்டுச் சற்றே நிம்மதியான சூழ்நிலையில் ஓய்வெடுத்துக் கொள்ள ஆரம்பிக்கிறார் என்பதை அவர் உணரச் செய்ய வேண்டும். பெண்கள், பிள்ளைகள் எல்லாரும் தொடர்ந்து மரியாதையுடனும், மனம் நோகாதபடி பேசும் படியும் பார்த்துக் கொள்ள வேண்டும். தம் பழைய காலத்தை அசை போடும் போது, தெரிந்த கதைதான் என்றாலும், உட்கார்ந்து பொறுமையாகக் கேட்க வேண்டும். ஓய்வு பெற்றவுடன் இருக்கக் கூடிய உடைந்த மனத்தை இவை சரிப்படுத்தும்.

பெரும்பாலும் எல்லா வீட்டிலுமே இருக்கக் கூடிய இந்தப் பிரச்னைக்கு நாம் அதிக முக்கியத்துவம் கொடுப்பதில்லை. வயதானவர்களின் தொண தொணப்பு என அலட்சியப்படுத்தி விடுகிறோம். இத்தனை நாள் வேலைக்குப் போய்க் கொண்டிருந்தவருக்குத் திடீரெனத் தள்ளாமை வந்துவிடாது. அவருடன் நட்புறவாகப் பேசிச் சிறிய காரியங்களில் ஈடுபடுத்தலாம். மாலை அலுவலகத்திலிருந்து வரும் மகன்,

'அப்பா, நீங்கள் ரொம்ப நாளா தேடிண்டிருந்த சின்மயானந்தா 'புக்' கிடைச்சதப்பா.''

எனக் கொடுத்தால் அவர் அகமகிழ்வார்.

மனைவி, மதிய வேளையில் விசேஷ டிபன் செய்து கொடுத்து அவரைச் சந்தோஷப் படுத்தலாம்.

வேலையிலிருந்துதான் அவர் ஓய்வு பெற்றார். குடும்பத்திற்கு அவர் இப்போதுதான் மிகவும் தேவை; ஒரு பெரியவராக இருந்து வழி நடத்த வேண்டும் என்பதை அவர் புரிந்து கொள்ளுமாறு நடந்து கொள்ளுங்கள். குடும்பமே சந்தோஷத்தில் மிதக்கும்.

— கிரிஜா ராகவன்

---

''என்னுடைய மனைவியைப் பற்றிய, நினைவுகள், என்னுடைய நெஞ்சத்தில் அடிக்கப்பட்ட பசு மரத்து ஆணி. அவை என்றென்றும் அழியாது. அவள் மந்திரியின் மனைவி என்ற பெயரோடு வாழ்ந்தாளே தவிர, அந்த அவஸ்தை என்றுமே காட்டிக் கொண்டதில்லை. அவளோடு வாழ்ந்த ஆண்டுகளில் ஒரு துரும்பைக் கூட அவள் என்னிடமிருந்து கேட்டதில்லை. யார் மீதும் எந்தக் குற்றச்சாட்டையும் வீசியதில்லை.

நான் ஓய்வின்றி உழைப்பதைப் பார்த்து மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் அவள் அவஸ்தைப்பட்டதுண்டு. ஆனாலும் வெளிக்காட்டியதில்லை. தொழிலாளர் நல இலாகா அமைச்சராக இருந்த போது பல பிரச்னைகள். பல சமயங்களில் பேச்சு வார்த்தை முடிய இரவு வெகு நேரமாகிவிடும். சில வேளைகளில் இரவு முழுவதும் கூட பேச்சு வார்த்தை தொடர்ந்ததுண்டு. இது என் உடல்நிலையைப் பாதித்து ரத்தக் கொதிப்பு அதிகமாயிற்று. அப்போது மட்டும் ஒருமுறை,

''இந்தப் பாழாய்ப் போன மந்திரி பதவியை விட்டுத் தொலையுங்களேன்''

என்று என் உடல்நிலை மீது அவளுக்கிருந்த அக்கறையை வெளிப்படுத்தினாள். அதோடு சரி.

என் கவனத்தைத் திருப்பக் கூடிய எதையும் அவள் என் காதில் போட்டதில்லை. ஏன்? தன் உடல்நிலை பற்றியே என்னிடம் தெரிவிக்கவில்லையே.. அந்தக் கால் புண், வியாதி என்ற அளவுக்கு ஆரம்பத்தில் விகவ ரூபம் எடுக்காத காரணத்தினால் சிறு புண் தானே என்று என்னிடம் சொல்லாமல் விட்டிருக்கலாம். ஆனால் அதுவே அவளது உயிரைப் பலி வாங்கிவிட்டது.

என் பொது வாழ்க்கையின் சுறுசுறுப்பும், பணிகளும், பயணங்களும் அமைச்சர் பொறுப்பு கட்டாயப்படுத்தும் கடமைகளுமே அவள் இல்லை என்கிற வேதனையைக் கொஞ்சம் மறக்கச் செய்கின்றன. இல்லாவிட்டால் நான் மனத்தளவில் என்றோ இறந்து போயிருப்பேன்'' என்கிறார் ராசாராம்.

—''ராசாராம் 60'' நூலிலிருந்து ந. கைலாசம்



# இல்லற அகதிகள்!

இது சினிமா பெயரல்ல. நாம் காணும் ஒவ்வொரு பெண்ணின் வாழ்க்கை! என்னடா, புதிர் போடுகிறுளே என்று பார்க்கிறீர்களா?

திருமணம் ஆனவுடனே ஒரு பெண் தன் பிறந்த வீட்டிற்கும், புகுந்த வீட்டிற்கும் நடுவில் படும் பாட்டைத்தான் சொல்கிறேன்! மத்தளத்திற்கு இரண்டு பக்கமும் இடி. இன்றைய பெண்களும் மத்தளங்கள் தான்.

பெண் வளரும்போதே தன் பிறந்த வீட்டை தற்காலிகமான வீடாகத்தான் நினைக்க வைக்கப்படுகிறுள். ஐந்து வயதுச் சிறுமி காலில் விழுந்து நமஸ்கரித்தாலே, 'நல்லபுருஷன் கிடைக்கட்டும்' என்ற ஆசீர்வாதம்! எட்டு வயதுப் பெண் பழம் சாப்பிட மறுத்தால், "நிறைய பழம், காய்கறியெல்லாம் சாப்பிட்டாத்தான் தளதளன்னு இருப்பே. பாக்கறவன் கொத்திண்டு போக வேண்டாமோ?"

இருபது வயசு ஆகிவிட்டாலே அவள் ரயில்வே பிளாட்பாரத்தில் நிற்பது போன்ற நிலைதான். எத்தனை சீக்கிரம் இவளுடைய ரயில் வருமோ, ஏற்றிவிடலாம் என மூட்டை முடிச்சுக்களுடன் காத்திருக்கும் பெற்ருேர்!

இத்தனை தடபுடலுக்கப்புறம் கல்யாணம் ஆகிவிட்டதோ, அப்புறம் இருக்கிறது அவள் பாடு. இவள் மாமியார் வீட்டில் காலடி வைத்தவுடன் சமைக்கிறுள் என்று வைத்துக் கொள்வோம் —

"இதென்ன இவ்வளவு நீர்க்க சாம்பார்? உங்க வீட்ல இப்படித்தான் வைப்பீங்களோ? உங்க பரதேசி குடும்பம் மாதிரி இது ஒண்ணும் தரித்திரக் குடும்பம் இல்லே. தாராளமா பருப்புப் போடலாம்!"

தடபுடலாகச் சாம்பார் வைத்தால் அப்போது பேச்சு வேறு மாதிரி இருக்கும். அது வேறு விஷயம்!

தாய் வீட்டிற்குப் போகிறுள் என்று வைத்துக் கொள்வோம்.

"'உங்க' வீட்ல அவியலுக்கு எப்படி அரைச்சுவிடறீங்க...?" என்பாள் ஆறுமாதத்துக்கு முன் திருமணம் செய்து அனுப்பிய தாய்.

இரண்டு பேருமே 'உங்க வீடு' என்கிறுர்களே. உண்மையில் இவள் எந்த வீடு? அகதிக் கதைதான். பிறந்த வீட்டிலும் தள்ளிவிடுகிறுர்கள். புகுந்த வீட்டிலும் ஒட்டுதல் இல்லை. இப்படி அகதியாக ஒவ்வொரு பெண்ணும் ஐந்தாறு வருடங்கள் திண்டாட வேண்டியதாகத்தான் இருக்கிறது.

அவளுக்கும் குழந்தை பிறந்து 'குடியுரிமை' கொண்டாடி 'எங்கம்மாவுக்கும்!' என்னும் போதுதான் அவளுடைய வேர்கள் கொஞ்சமாவது புகுந்த வீட்டில் ஊன்றும்.

ஒவ்வொரு பெண்ணும் இந்த இரண்டு பக்கக் குடும்பங்களிடையே திண்டாடுவது பெரிய சோகம். பார்வதியே 'தாட்சாயிணி' யாகி அப்பாவுக்கும், புருஷனுக்கும் நடுவே அல்லாடவில்லையா?

இன்றைக்குப் படித்து வேலை பார்த்துத் திருமணம் செய்து கொள்ளும் பெண்களின் நிலை மிகமிக அவலமானது. திடீரென்று ஒரு சம்பளம் குறைந்து அவதிப்படும் பெற்ருேரைப் பார்க்கும்போது அவளுக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும்.

ஒன்ருந் தேதியானல் இரகசியமாக ஆபீஸ் வரும் அப்பாக்கள் உண்டு.

"அம்மா, உன் கல்யாணத்திற்காக பாத்திரம் வாங்கின கடைக்காரன் வாச



சண்டை வந்து சுத்தறான்மா!" என்று கண்ணைக் கசக்கும் போது அவன் நெஞ்சே வெடித்து விடும்.

பெண்கள் சம்பாதிப்பதால் அவள் பொருளாதார நிலையில் சுதந்திரம் அடைந்து விட்டாள் என மேடையில் பேசலாம். ஆனால் சம்பாதிப்பதால் அவள் அதிகமாக அவஸ்தைப்படுகிறாள் என்றுதான் சொல்ல வேண்டும்.

"நாம் வளர்த்து படிக்க வைத்துச் சம்பாதிக்க வைத்தோமே. ஒரு உதவி கேட்டா செய்ய மாட்டேன் என்கிறாளே, நன்றி கெட்டவள்!"

எனத் திருமணமான தன் பெண்ணைத் தூற்றும் பெற்றோர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். வெளிப்படையாகச் சொல்லா விட்டாலும்.

'பாத்தியா, ஒரு புடைவை கூட வாங்கித் தராளா? இவளும், இவ புருஷனுமா சம்பாதிக்கிறாங்களே!'

என மனசுக்குள் மறுகும் தாய்மார்களும் உண்டு.

ஆனால் திருமணம் செய்து கொண்டு போன பிறகு தன் பெண் படும்பாடோ, அவளுக்கும் பிரச்னைகள் இருக்கும் என்பதையோ இவர்கள் உணருவதில்லை.

அதுவும் இன்றைக்குப் படித்துச் சம்பாதித்து, நாலு பேரைச் சந்திக்கும் நிலையிலுள்ள பெண்கள் சுயகௌரவம் பார்ப்பார்கள். தங்களுடைய பிரச்னைகளைச் சொல்வதில்லை. அதனாலேயே அவளுக்குப் பிரச்னைகள் இல்லை என்று சொல்லிவிட முடியுமா?

அதேபோலவே மருமகள் எனத் தன் குடும்பத்திற்கு வந்துவிட்டால், அவள் ஏதோ ஆகாயத்தில் இருந்து குதித்தவள் போல நடந்து கொள்ள வேண்டும் என்றுதான் புகுந்த வீட்டில் நினைக்கிறார்கள்.

அவள் பிறந்த வீட்டைப் பற்றிப் பேசக் கூடாது; அவர்களுக்கு ஒன்றும் செய்யக் கூடாது; பந்த பாசங்களையெல்லாம் துறந்து விட வேண்டும்.'

இதுதான் அவர்களின் எதிர்பார்ப்பு.

என்னதான் முற்போக்குச் சிந்தனையுள்ள கணவனாக இருந்தாலும், தன் மனைவி பிறந்த வீட்டிற்கு உதவி செய்வதை அவனால் ஏற்றுக் கொள்ள முடிவதில்லை.

இப்படி இரண்டு பக்கத்திலும் ஒரு பெண் படும் பாடு இருக்கிறதே. பாவம் இந்தப் பெண் குலம்! ஏதோ திருமணமாகி விட்டால் கணவனுக்குத்தான் கஷ்டம் என்பார்கள்.

**மற்றவர்கள் முன்னிலையில் தேவையானவற்றிற்கு மனைவியைப் புகழுங்கள். அதே மாதிரி கண்டிக்கும் பொழுது தனிமையில் பேசி விடுங்கள்.**

மாமியார், மருமகள் சண்டை வந்துவிட்டால் தாய்ப் பக்கம் பேசுவதா, மனைவி பக்கம் பேசுவதா எனத் தெரியாமல் திண்டாடுவான் என்பார்கள். ஆனால் பெண் தன்னுடைய இரண்டு குடும்பங்களுக்கு நடுவே திண்டாடுகிறாளே அதைப் பற்றி யாருமே நினைப்பதில்லை.

ஏனென்றால் பெண் என்றாலே அவள் எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ள வேண்டும். சகித்துக் கொள்ள வேண்டும் என்றுதான் எதிர்பார்க்கிறார்கள். அவளுக்கும் உணர்வுகள் இருக்கும் என்பதே பலருக்கு மறந்துவிடுகிறது.

திருமணமாகி பேரன், பேத்திகள் எடுத்த பிறகு கூட, அவள் பிறந்த வீட்டைக் குறை சொல்லும் கணவன்மார்கள் இருக்கிறார்கள். திருமணமான பிறகு தங்களைத் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை என வெறுக்கும் பெற்றோர்களும் இருக்கிறார்கள்.

ஏற்கெனவே புதிய உறவுகள், புதிய சூழ்நிலை, புதிய பழக்க வழக்கங்களால் குழம்பிப் போயிருக்கும் மருமகளை ஒரு மாமியார் இழுத்து இணைத்து 'இது உன் வீடு' எனச் சொல்வாளேயானால் அந்தபுது மணப்பெண்ணிற்கு எத்தனை தெம்பாக இருக்கும்?

அதேபோலத் திருமணமான பெண் தங்களிடம் எதுவும் சொல்லா விட்டாலும் அவளுக்கும் பல பிரச்னைகள் இருக்கும் எனப் புரிந்து கொள்வார்களேயானால் அவளுக்கும் எத்தனை நிம்மதியாக இருக்கும்? தங்கள் வீட்டில் இருக்கும்போது எத்தனை தவறுகள் செய்தாலும் அவர்களுக்குப் பெரிதாகத் தோன்றாது. திருமணமாகிப் போய்விட்ட பிறகு சிறியதாக ஏதாவது சொல்லி விட்டால் கூட, 'ஹூம், நீங்கள்லாம் அப்படித்தான்' என நொடிப்பதைத் தவிர்க்க வேண்டும். அவளுக்குப் புகுந்த வீட்டில் குழப்பம் வரும்போது, பெற்றோர்கள் அனுபவம் வாய்ந்தவர்கள் என்ற முறையில் ஆலோசனைகள் சொல்லலாம். திருமணமான பெண்ணின் பெற்றோர்கள் அவளுக்கு ஆலோசகர்களாக இருக்கலாமே தவிர பிரச்னைகளை உண்டாக்குபவர்களாக இருக்கக் கூடாது.

இந்த இரண்டுங்கெட்டான் நிலை ஒவ்வொரு பெண்ணின் வாழ்க்கையில் ஏற்பட்டாலும், பல பெண்களுக்குப் பெரிய பாதிப்பாகவே மாறி விடுகிறது. நிரந்தரமான பல பிரிவுகள் ஏற்பட்டு விடுகின்றன. புகுந்த வீட்டில் கஷ்டம் வரும்போது தஞ்சம் கோரும் தன் பெண்ணையே தள்ளி விட்டதால், சாவை நாடிப் போன பல பெண்களின் சோகக் கதைகளும் உண்டு.

உறவுகள் சேரச் சேர அது பலப்பட வேண்டுமே தவிர குழப்பங்களை உண்டு பண்ணக் கூடாது. அதற்குக் குடும்ப அங்கத்தினர்கள் ஒவ்வொருவருமே கவனமாக யோசித்துச் செயல்பட வேண்டியது அவசியம்.

# மோன்டாஜ் நம்பிக்கை, நாள்முழுதும் நீடிக்கிறது!

புதிய

# மோன்டாஜ்

டியோடரண்ட் சோப்

## சர்வதேச டியோஸ்டாட்*
## மற்றும் நறுமணம் அடங்கியது

புதிய மோன்டாஜ் அநுபவம்...இது உலகின் மிகச்சிறந்த டியோடரண்ட் சோப்புகளுக்கு இணையானது என்பதை உபயோகித்தால் உணருவீர்கள். மோன்டாஜில் அடங்கியுள்ள பிரத்தியேக சர்வதேச உட்பொருளாகிய **டியோஸ்டாட்*** உங்களுக்கு புத்துணர்ச்சி அளிப்பதுடன், எவரும் உங்கள் அருகாமையை விரும்பும்படி செய்கிறது. மேனியெங்கும் நாள் முழுவதும் நீடித்த நறுமணம். இதில் மணம் மயக்கும் நீடித்து நிற்கும் சர்வதேச நறுமணம் அடங்கியுள்ளது.

உலகெங்கும் உள்ள ரசனைமிக்க பெண்மணிகள் போன்று உங்கள் தினத்தை புதிய மோன்டாஜ் உதவியுடன் துவக்குங்கள்.

தேர்ந்தெடுத்த நகரங்களில் மட்டுமே கிடைக்கிறது.









**Wellcome**

பரோஸ் வெல்கம் (இந்தியா) லிமிடெட்

**வாழ்விலே சில நல்ல விஷயங்கள் வரவேற்கப்படுகின்றன-வெல்கம்**

THE EDGE/86/BW/23-tm

# 'திக்' காப்பிக்கு ஈடாகுமோ திடீர் காப்பி?



'சுக்லாம்பரதரம் விஷ்ணும்' என்று ஆரம்பிக்கும் ஸ்லோகத்தைப் பாடியவர் அதை விஷ்ணு ஸ்தோத்திரமாகப் பாடிய தென்னவோவாஸ்தவம். ஆனால் அவருடைய தீர்க்கதரிசனத்தை என்னவென்று சொல்வது? ஆயிரக்கணக்கான ஆண்டுகள் கழித்து பின்வரும் சந்ததியினர் அடிமையாகப் போகும் 'காப்பி' எனும் பானத்துக்கும் அல்லவா அது ஆச்சரியமாகப் பொருந்துகிறது!

சுக்லஅம்பரதரம்—வெண்மையான ஆடை உடுத்தியதும்,

சசிவர்ணம்— கருமை நிறம் கொண்டதும்,

சதுர்புஜம்—(காப்பிப் பொடி, சர்க்கரை, பால், நீர் ஆகிய) நான்கு கைகளும் கொண்ட விஷ்ணும்—(இங்கே) காப்பியை

சர்வவிக்னோபசாந்தயே—எல்லா விக்னங்களையும் போக்க,

ப்ரசன்னவதனம்தியாயேத்—காலைஎழுந்தவுடன் முதலில் சேவிக்க வேண்டும்!

என்னே காப்பியின் மகிமை!

'எனக்குச் சாப்பாடு கூட வேண்டாம், காப்பியிருந்து விட்டால் போதும்' என்பவர்களும், 'பசி கூட பொறுத்துக் கொள்வேன், காப்பியில்லாவிட்டால் தலைவலிதான்' என்று அங்கலாய்ப்போரும், எருமைப் பாலில் 'திக்' காகக் காப்பி சாப்பிடா விட்டால் காப்பி சாப்பிட்டது போலவே இல்லை' என்று கிடைக்கும் அத்தனை பால் பாக்கெட்டுகளையும் தள்ளுபடி செய்துவிட்டு, எருமை மாட்டினருகே காலை நாலரை மணிக்கே இருட்டில் போய் உட்காருபவர்களும் இருக்கிறார்கள். இவ்விதம் மனித குலத்தையே தன்வசமாக்கிக்கொண்ட காப்பியைப் பற்றி அறிந்து கொள்ள இன்னும் எவ்வளவு இருக்கிறது!

எதியோப்பியாவில் உள்ள கஃபா என்ற மாகாணம்தான் காப்பியின் தாய்வீடு என்று நம்பப்படுகிறது. காப்பியைக் குறிக்கும்




எல்லா மொழிச் சொற்களும் இவ்வார்த்தையின் திரிபுதான். காப்பி கண்டுபிடிக்கப்பட்டதே தற்செயலாகத்தான். ஆடு மேய்க்கும் சிறுவன் ஒருவன் அரேபியாவில் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால், ஒரு குறிப்பிட்ட செடியின் தழையையும், காய்களையும் மேய்ந்த பின் ஆடுகள் சற்று அதிக சுறுசுறுப்புடன் இருப்பதைக் கண்டான். முதன்முதலில் காப்பி ஒரு தெம்பூட்டும் பானமாக இல்லை. ஓர் உணவாகவே இருந்து வந்தது. கொட்டைகளை வறுத்துப் பொடியாக்கி அதை கொழுப்புடன் கலந்து உருட்டி லட்டு பிடித்து உண்டனர்!

இன்று காப்பி இந்தியா, இந்தோனேஷியா, இலங்கை, பிரேஸில் ஆகிய நாடுகளில் பயிராகிறது. மலைச்சரிவுகளில் வளரும் இது நம் நாட்டில் முதன் முதல் 'பாபா புதன்' என்னும் கர்நாடக மலைச்சரிவில் பயிரிடப்பட்டது. தற்போது கர்நாடகம், தமிழ்நாடு,

கேரளம் மூன்றும் காப்பி விளைச்சலில் முன்னிற்கின்றன.

மூன்று வயது ஆகும்போது காப்பி செடி பலன் கொடுக்க ஆரம்பித்து, அப்புறம் ஒரு முப்பது ஆண்டுகள் தொடர்ந்து கொடுக்கிறது. பழத்துக்குள் குண்டாக ஒரே விதை இருப்பது 'பீபெர்ரி', மற்றதில் இரண்டு தட்டைக் கொட்டைகள் ஒட்டிக் கொண்டிருக்கும். எல்லாக் கொட்டைகளுக்கும் நடுவில் பிளவு உண்டு. விதைகள் முற்றி அறுவடை பக்குவம் வர, எட்டு, ஒன்பது மாதங்கள் பிடிக்கும். சிக்மகளூர், ஹாஸ்ஸன் போன்ற கர்நாடக மாவட்டங்களில் அமோகமாகக் காப்பி விளைந்த போதிலும், நீலகிரியில் கிடைப்பது சற்று உயர்வாகக் கருதப்படுகிறது. மண்ணுக்குத் தகுந்தாற்போல் காப்பியின் மணம் மாறுகிறது என்பது ஒரு விசித்திரம். 'பாபுபுதன் மாவட்டத்தில் விளையும் கொட்டையின் மணமும் ருசியும் அலாதியாம்!

நல்ல காப்பி தயாரிப்பது என்பது ஓர் 'எக்ஸ்பர்ட்' வேலை, அனுபவத்தில் தெரிந்து கொள்ள வேண்டிய கலை. கொட்டையை அளவான ரீதியில் 'லைட் ப்ரௌன்' கலருக்கு ஒரு சீராக வறுக்க வேண்டும். அதிகமாகவோ, குறைவாகவோ வறுபடக் கூடாது. பொடியை அப்போதைக்கப்போது அரைக்க வேண்டும் — கொஞ்சம் நறநறவென்று. வறுப்பதில்தான் மணத்தின் ரகசியம் உள்ளது என்றும், கிட்டத்தட்ட 40 பொருள்கள் சேர்ந்து இம்மணத்தை அதற்கு அளிக்கின்றன என்றும் கூறுகின்றனர் விஞ்ஞானிகள். காற்று படப்பட, வாசனை குறைந்து கொண்டே வரும் — அது எவ்வளவு உயர்ந்த கொட்டையாக இருந்தாலும் சரி.. ஆகையால், புதிதாக அரைத்த பொடியையே உபயோகிக்கவும்.

இன்று நாட்டில் 'திடீர் உணவு' ரகங்கள் பிரபலமாவதற்குக் காரணம், கணவன் — மனைவி இருவருமே வெளியில் செல்வது மட்டும் அல்ல. வாழ்க்கை முறையே மாறி விட்டதும்தான். இந்த ரகங்களில் மார்க்கெட்டில் முதல் முதல் தோன்றியதே திடீர் காப்பிதான். இதைத் தயாரிப்பது மிகவும் சுலபம். அனுபவமில்லாத பத்து வயதுப் பெண்ணும் இதைத் தயாரிக்க முடியும். ஆனால் உண்மையான காப்பி பக்தர்களுக்கு இதில் அடிக்கும் வெல்லப் பாகு போன்ற மணம் பிடிப்பதில்லை. இதற்கு முதலில் 'கரையும் காப்பி' என்ற பெயரும் இருந்தது.

கரையும் காப்பிப் பொடியை முதலில் கண்டுபிடித்த பெருமை டாக்டர் 'சார்டோரி காட்டோ' என்ற ஜப்பானிய விஞ்ஞானியைச் சாரும். ஆண்டு 1901. பிறகு 1906 இல் ஜி. வாஷிங்டன் என்பவர் அமெரிக்காவில் வேறு முறையைக் கூறினார். இன்று நம் நாட்டில் காப்பிப் பொடியிலிருந்து வெந்நீர் மூலம் சாற்றைப் பிரித்து எடுத்து நீரை ஆவியாக்கிப் பிரித்தபின், 'ஸ்ப்ரேட்ரை'யிங் மூலம் தயார் செய்கிறார்கள்.

'திடீர்க் காப்பி நேரம், சக்தி, உழைப்பு எல்லாவற்றையும் மிச்சமாக்குகிறது' என்பது என்னவோ உண்மை. ஆனால் இதற்கு உள்ள முக்கியமான குறைகள் மூன்று. ஒன்று தயாரிப்பின் போது சுலபமாக ஆவியாகும் ரம்மியமான மணம் தரும் எண்ணெய்கள் அடிபட்டுப் போகின்றன. இரண்டு, உலகத்தில் விளையும் காப்பிக் கொட்டைகளில் பத்தில் ஒரு பங்கு, விலை குறைவான 'ரொபஸ்டா' ரகமாகும். இதைத்தான் அநேக கம்பெனிகள் திடீர்க் காப்பிக்குப் பயன்படுத்துகின்றன. மூன்றாவது: ஈரம் நீக்கப்பட்ட இது, காற்றில் உள்ள ஈரத்தை உறிஞ்ச ரெடியாக எப்போதும் காத்துக் கொண்டிருக்கிறது. அப்படி ஒரு தாகம். சிறிது அஜாக்கிரதையாக இருந்தாலும், மழைக்காலத்திலும், கட்டி கட்டிக் கொள்வதும் சகஜம்.

இன்னொரு விஷயம்: எவ்வளவோ கம்பெனிகள் எவ்வளவோ முயன்றும், 'திடீர் தேநீர்' கடைசிவரையில் பிரபலமாகவே இல்லை. என்ன இருந்தாலும் நம் காப்பி, காப்பிதான்!

காப்பியில் உள்ள 'காஃபின்' என்ற நச்சுப் பொருள்தான் தெம்பூட்டுவதற்கும், பழக்கமாவதற்கும் காரணம். இதன் அளவு வரம்பு மீறினால், தூக்கமின்மை, படபடப்பு, போன்ற வியாதிகள் நேரிடலாம். சூலுற்ற பெண்கள், 'காஃபின்' அளவுக்கு மீறி உட்கொள்ளுவதைத் தவிர்ப்பது நல்லது. ஏனென்றால், இது கர்ப்பப் பைக்குள் ஊடுருவிச் சென்று வளரும் குழந்தையைப் பாதிக்கவும் செய்யும் என்று டாக்டர்கள் கருதுகின்றனர். இதனால் குழந்தையின் வளர்ச்சித் தடையும், விரல்களின்மை போன்ற குறைகளும் ஏற்பட ஏது உண்டு. ஆனால் இது நிச்சயமாக இன்னும் நிரூபிக்கப்படவில்லை. எனினும் முன்ஜாக்கிரதையாகவே, எதற்கும் அதிகமாக காஃபினை உட்கொள்ளுவதைத் தடுப்பது சாலச் சிறந்ததாகும். இது தாய்க்கும் நல்லது. கருவுக்கும் நல்லது.

காப்பியைச் சூடாக, சர்க்கரை, பால் விட்டு எல்லோருமே நம்மைப் போலக் குடிப்பதில்லை. சில்லிட்ட ஐஸ் காப்பி, கருங்காப்பி (black coffee) என்னும் வெறும் டிகாக்ஷன், (கசப்பே ஒரு ஒரிஜினல் ருசியாம்!) க்ரீம் காப்பி என்று எத்தனையோ அவதாரங்கள் காப்பிக்கு!

— எஸ். டி. ராகவன்

குடும்பத்திற்காக ஓய்வு நேரம் கட்டாயம் ஒதுக்க வேண்டும். குழந்தைகள், மனைவியுடன் பிக்னிக், கடற்கரை, கோயில் என்று எது முடிகிறதோ அங்கே போய் வரலாம். சினிமா, டிராமாவைத் தவிர்க்கவும். குடும்ப அங்கத்தினர்கள் ஒன்று சேர்ந்து பேசவும், சிரிக்கவும் தேவையான சூழ்நிலை வேண்டும்.

"எண்ணத்தில் இளமை துள்ளும்போது, தோற்றத்திலும் இளமை வேண்டுமன்றோ!"

## "நான் வழக்கமாக கோத்ரெஜ் பவுடர் ஹேர்-டை உபயோகிக்கிறேன்"

—தனுஜா

பிரபல, திரைப்பட மற்றும் டி. வி. நட்சத்திரம் தனுஜா எப்போதும் தன் தோற்றத்தை கவர்ச்சிகரமாக வைத்திருக்கிறார். இவரின் குன்றாத இளமை, இவரை துடிப்புடனும், சுறுசுறுப்புடனும் தோன்றச் செய்கிறது.

"திருமணம் ஆகி இரண்டு பெண்களுக்கு தாயான பின்பும், நான் இளமையுடன் தோன்ற வேண்டும் என விரும்புகிறேன் **ஆகையால், கேசத்திற்கு சாயம் பூசுவதை நகச்சாயம் தீட்டிக் கொள்வது போலவே முறை தவறாமல் செய்கிறேன்!"**

"நான் கோத்ரெஜ் பவுடர் ஹேர்-டை உபயோகிக்கிறேன்! இது பாதுகாப்பானது; தானே பரவுகிறது; உபயோகிக்க எளிது. கேசத்திற்கு இயற்கை வண்ணமூட்டுகிறது. ஆம் நிச்சயமாக, நான் இளமையுடன் தோன்ற விரும்புகிறேன்! எந்தப் பெண்மணிதான் விரும்ப மாட்டாள்!!"

இப்போது 25% அதிகம் புதிய பேக்கில்







உங்களால் யூகிக்கவே முடியாது... அவர் சொல்லும் வரை... இவ்வளவு இயற்கையான தோற்றம்.

Mudra: B: GPH: 2705: TM

# இன்பம் நேர்கையில்... 10

வித்யா சுப்பிரமணியம்

ஐந்து வருடங்களாக உயிருக்குயிராகக் காதலித்தவனை அடையப் போகும் நேரத்தில் விதி செய்த சதியின் பாதிப்பு அந்தப் பெண்ணிடம் அதிகமாகவே இருப்பதை உணர்ந்தாள் உமா.

பணத்தையும் பெற்றுக் கொள்ள மறுத்தாள். இவை இரண்டு விஷயங்களே மோகன் மேல் அவள் வைத்திருக்கும் அளவு கடந்த அன்பைத் துல்லியமாகக் காட்டிய போது ஒன்றும் செய்ய முடியாமல் தவித்தாள் உமா.

"விமலா கொஞ்சம் யோசித்துப் பார். உங்கள் இருவருக்கும் இன்னும் திருமணமாகவில்லை. வெறும் நிச்சயதார்த்தம் மட்டும்தான் நடந்திருக்கிறது. இந்த நிலையில் நீ உன் வாழ்க்கையை வீணடித்துக் கொள்ள நினைப்பது ரொம்ப தப்பு விமலா" மெதுவாகக் கூறின உமாவைப் பார்த்து விரக்தியாகச் சிரித்தாள் விமலா.

"மனத்தால் எப்போதோ கணவன் மனைவியாகி விட்ட நாங்கள் உடலாலும் ஆகிவிட ஏற்பாடு செய்யப்பட்டதுதான் இந்தத் திருமணம். வெறும் சரீர சுகம்தான் வாழ்க்கை என்று பார்த்தால், அதைப் பெறாத நான் ஒரு கன்னிப் பெண்தான். ஆனால் நல்ல மனங்களின் ஆன்மீகமான உணர்வுகளின் சங்கமம்தான் திருமணம் என்றால் அதை இழந்துவிட்ட நான் ஒரு விதவை, உமா விதவை!" விமலா குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

"ப்ளீஸ், விமலா உன்னை அமைதிப்படுத்திக்கோ..." உமா கெஞ்சினாள்.

"சாகும் நேரத்திலும் என்னைத் தன் மனைவியாகவே நினைக்கிறேன் என்று கூறியிருக்கிறாரே அதற்கு என்ன அர்த்தம் உமா? இறந்து போன அவர் என்னைத் தன் மனைவியாக நினைக்கலாம். ஆனால் உயிருடன் இருக்கும் நான் அடுத்தவனிடம் தஞ்சம் புக வேண்டும். அப்படித்தானே? ஒருக்காலும் முடியாது. அவர் இறந்தால் என்ன? என் மனத்தில் அவர் உயிருடன்தான் வாழ்கிறார். நாங்கள் இதுவரை பழகிய நாட்களும் பேசின பேச்சுக்களும் என் நினைவில் நிற்கின்றன. அந்த நினைவுகளே எனக்குத் துணை. நிஜங்களை விட நினைவுகள் பசுமையானவை. அதுவே எனக்குப் போதும்."

இப்படிப் பிடிவாதமாகவும் உறுதியாகவும் பேசுகிறவளிடம் என்ன சொல்லி மனத்தை மாற்ற முடியும்?

"என்னவோ நான் சொல்லவேண்டியவை களைச் சொல்லி விட்டேன். நீ வாழ வேண்டும். உன்னை வாழ வைக்கும் பொறுப்பு என்னுடையது என்று அந்த நல்லவர் கூறினதை நிறைவேற்ற முடியாமல் போன என் நிலைமைக்கு வருத்தப்படுவதைத் தவிர வேறு என்ன செய்வது? சரி, ஒரு கையெழுத்துப் போட்டுவிடு. பணத்தை உன் பெயரில் பாங்கில் போட்டுவிடுகிறேன். உனக்கு எப்பொழுது தோன்றுகிறதோ எடுத்துக் கொள்ளலாம்..." என்று பலவந்தமாக ஒரு கையெழுத்து வாங்கிக் கொண்டாள் உமா.

இந்தப் பெண்ணைச் சம்மதிக்க வைப்பது இவ்வளவு கஷ்டமாக இருக்கும் என்று துளிக்கூட நினைக்கவில்லை உமா. ஆண்டவன்தான் இதற்கு வழி சொல்ல வேண்டும். 'மோகன் என்னை மன்னித்து விடுங்கள்' என்று முணுமுணுத்தாள்.

உமா வீட்டுக்குள் நுழையும் போது மணி ஏழு. ஹாலில் சோபாவில் மஹாதேவன் ஒருக்களித்துப் படுத்துக் கண்ணை மூடிக் கொண்டிருந்தார். சாதாரணமாக இந்த நேரத்தில் அப்பா படுத்துக் கொண்டு பார்த்ததில்லை, உமா. அதுவும் ஹாலில் என்றுணர்ந்த போது அவளுக்கு என்னவோ போல் இருந்தது.

எவ்வளவு முயன்றும் இப்போதெல்லாம் முன் போல் சகஜமாக அவரிடம் பேச முடிவதில்லை. அப்படியே பேசினாலும் அதில் எங்கோ ஒரு போலித்தனம் ஒளிந்திருப்பதை அவளால் உணர முடிந்தது.

மோகன் இறந்த பிறகு ஒரு மாதமாக ஏற்பட்ட அடுத்தடுத்த பிரச்னைகளால் சீக்கிரமே ஆபீஸ் சென்று விடுகிறாள். வருவதற்கும் லேட்டாகி விடுவதால் சுத்தமாக அப்பாவுடன் பேச சந்தர்ப்பமே ஏற்படுவதில்லை.

மங்களம் கூட இதைப் பற்றிக் கேட்டு விட்டாள். அதற்கெல்லாம் உமாவின் பதில் சிரிப்புதான். அவளின் இந்தத் திடீர் மாற்றம் வேலை பளுவின் காரணமாக இருக்கலாம் என்றுதான் அவர்கள் நினைத்தனர். ஆனாலும் மங்களத்தின் பெற்ற வயிறு மட்டும் உமா பெண்ணாகப் பிறந்து விட்டதால் கொஞ்சம்

நெருப்பைக் கட்டிக் கொண்டது.

அவனுக்குத் திருமணம் செய்ய வேண்டிய கடமை ஒன்று பாக்கியிருப்பதை கணவனிடம் நினைவு படுத்தினாள்.

உமாவின் மேல் வேறு எந்த சந்தேகமும் இல்லாவிட்டாலும் கடமையை முடித்துவிட்டால் நல்லது என்றே அவர்களுக்குப் பட்டது.

கைகால் அலம்பிவிட்டு வந்து அப்பாவின் அருகில் வந்து அமர்ந்தாள். "என்னப்பா உடம்பு சரியில்லையா?" என்றாள்.

அவள் வந்து விட்டதை உணர்ந்ததும் மஹாதேவன் கண் விழித்துப் பார்த்தார்.

"ம். ஆமாம். லேசா ஜுரம், தலைவலி. நீ காப்பி டிபன் சாப்பிட்டாச்சாம்மா?"

"லேட்டாயிடுத்து. சாதமே சாப்பிடலாம்னு இருக்கேன்." உமா அப்பாவின் நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள். கதகதவென்று சூடு இருந்தது. "கொஞ்சம் அமிர்தாஞ்சனம் வேணும்னு தடவி விடட்டாப்பா?"

"இல்ல. வேண்டாம்மா. மத்தியானமே ஒரு தட்வை உங்கம்மா தேய்ச்சு விட்டா!"

"அப்போ இன்னிக்கு நீங்க லீவா?"

"இல்லே. மத்தியானம் முடியலேன்னு வந்துட்டேன். சரி, நீ போய்ச் சாப்பிடும்மா."

"நீங்க ஒண்ணும் சாப்பிடலையாப்பா?"

"இல்லே. பசியில்லே" என்றார்.

உமா எழுந்து அடுக்களைக்கு வந்தாள். மங்களம் அடுப்பில் வேலையாக இருந்தாள்.

"உமா சித்த நீயே எடுத்துப் போட்டுக்கோயேன். உங்கப்பாக்கு இந்தக் கஞ்சியைக் கொடுத்து குடிக்கச் சொல்லிட்டு வரேன்" என்றாள்.

அவள் பாதி சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே அம்மா உள்ளே வந்தாள். அவள் பக்கத்தில் உட்கார்ந்தாள்.

"இன்னும் கொஞ்சம் கூட்டுப் போட்டுக்கோ உமா" என்று சொன்னாள். அவளே எடுத்துப் போட்டாள்.

'நீ சாப்பிடலையாம்மா?' என்று கேட்டாள் உமா. "பாவம் உங்கப்பா. அவருக்கு மனசுல என்ன வேதனையோ உடம்புக்கு வந்துடுத்து."

உமா அவளை நிமிர்ந்து பார்த்தாள். "என்னம்மா சொல்ற?" என்றாள் குற்ற உணர்ச்சியுடன்.

மங்களம் அவள் தலையை மெதுவாக வருடிவிட்டவள், "ஒரே பெண்ணுச்சே, காலாகாலத்துலே கல்யாணம் பண்ணணுமேன்னு உங்கப்பா கவலைப்பட ஆரம்பிச்சுட்டார் உமா."

"என்னம்மா, என் கல்யாணத்துக்கு இப்ப என்ன அவசரம்?" என்று உமா பதற்றத்துடன் கேட்டதும் மங்களம் சிரித்தாள்.

"உனக்கு வயது இருபத்தி அஞ்சு முடிஞ்சாச்சு, உமா. இன்னும் அவசரப்படாம இருந்தா எப்படி?"

ஒரு நிமிடம் ஒன்றும் பேசாமலிருந்த உமா, "இல்லேம்மா. எனக்கு இப்போ கல்யாணம் வேண்டாம்" என்று சுருக்கமாகக் கூறிவிட்டு எழுந்தாள்.

எல்லோரும் முதலில் இப்படித்தான் பேசுவார்கள் என்ற நினைப்புடன் அவளையே பார்த்தாள் மங்களம்.

அம்மா கல்யாணப் பேச்சை எடுத்தவுடன் ஏனோ அவளுக்கு விமலாவின் நினைவு வந்தது. பாவம் விமலா என்று தனக்குள்ளே கூறிக் கொண்டவளுக்குச் சட்டென்று முரளியின் நினைவு வந்ததும் திடீரென்று அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. இப்படி நடந்தால்? என்று நினைத்துக்கொண்டாள். ஏன் முரளியே விமலாவை ஏற்றுக் கொள்ளக் கூடாது. அண்ணனுக்கு மனைவியாக வேண்டியவள் என்று கொஞ்சம் கஷ்டப்பட்டாலும் இறந்த காலத்தை நிகழ் காலத்தோடும் எதிர்காலத்தோடும் ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்கும் வரை வாழ்க்கை சந்தோஷமாக இருக்கலாம். முரளி கண்டிப்பாக அப்படி ஒப்பிட்டுப் பார்க்க மாட்டான் என்றே தோன்றியது. சரி, நாளைக்கே அவனிடம் கேட்டுவிட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு தூங்கிப் போனாள்.

'கடனே' என்று விழுங்கி வைக்காமல் மனைவியின் சமையலை அனுபவித்துச் சாப்பிட்டுப் பாராட்டுங்கள். சாப்பிடும் பொழுது குடும்ப அங்கத்தினர் அனைவரும் ஒன்று சேர்ந்து சாப்பிடுவது நல்லது பெண்ணின் ஸ்கூல் அனுபவங்கள், பையனின் கல்லூரி கடி, பெற்றோர் இருவரின் ஆபீஸ் அனுபவங்களில் ஜோக்குகளைப் பரிமாறிக் கொள்ளலாம்.

அன்றைக்குக் காலையிலிருந்தே சம்பா கொஞ்சம் குழைந்து குழைந்து முரளியிடம் பேசினாள். விமலாவுக்குப் பணத்தைக் கொடுத்த பின்பு ஒரு வாரம் வரை தன்னை ஏறெடுத்தும் பார்க்காமல் கோபமாக இருந்த அம்மா திடீரென்று ஏன் குழைகிறாள் என்று ஆச்சரியமாக இருந்தது.

"என்னம்மா திடீர்னு நைஸ் பண்றே. என்ன விஷயம்?" என்று கேட்டு விட்டான்.

"நைஸ் பண்றேனா? உன்னை எதுக்குடா நைஸ் பண்ணணும் நான்? எனக்கென்ன லாபம்? என்னமோ பைத்தியக்காரத்தனமா ஒரு வாரமா கோச்சுண்டு உனக்கு சரியா சாதம் கூட போடலே. யோசனை பண்ணிப் பார்த்தா பாவம் விமலா அவளுக்குப் பணம்



# நான்
# புதிய காமதேனு
# கூட்டுறவுச் சிறப்பங்காடியிலேயே
# எல்லாப் பொருட்களையும்
# வாங்குகிறேன். ஏன் தெரியுமா?

## ஒன்றா... இரண்டா!
## பத்துக் காரணங்கள் உண்டு!

1. தரமான பொருட்கள் கிடைக்கும்.
2. பொருட்கள் ஒழுங்காகவும் கவர்ச்சியாகவும் காட்சிக்கு வைக்கப் பட்டுள்ளன. பொருட்களை எளிதில் தேர்ந்தெடுக்கலாம்.
3. பொருட்கள் சரியான எடை, அளவில் உள்ளன. பணத்துக்கேற்ற பொருள் கிடைக்கும்.
4. நியாயமான விலை—போதத்திற்கு இடமே இல்லை.
5. விரைவில் நவீன முறையில் பட்டியல் தயாரிக்கும் கருவிகள் உண்டு.
6. எப்போதும் தேவையான பொருட்கள் தயாராக இருப்பில் உண்டு.
7. புதிய காய் கனிகளும் கிடைக்கும்.
8. வாகனங்களை வசதியாக நிறுத்தலாம்.
9. சுவையான தின்பண்டங்கள் ஏராளம்.
10. காமதேனு கூட்டுறவு சிறப்பங்காடி—ஆதரிக்க வேண்டியது; இது ஒருவருக்கொருவர் நன்மையடையும் முயற்சியும் கூட!

# புதிய காமதேனு
# கூட்டுறவுச் சிறப்பங்காடி

'வானவில்' அருகில்—தேனாம்பேட்டை
சென்னை-18.

புதிய காமதேனு—ஞாயிறு விடுமுறை
பழைய காமதேனு—வெள்ளி விடுமுறை

கொடுத்தது சரிதான்னு பட்டுது. அநாவசியமா சண்டை போட்டோமேன்னு கஷ்டமா இருந்தது. அதனாலே இன்னைக்கிக் கொஞ்சம் ஆசையா உங்கிட்ட பேசினா நீ நைஸ் பண்றேன்னு சொல்றே." கண்ணில் நீர் கசிய மூக்கைச் சிந்த ஆரம்பித்தாள் சப்பா.

"சரி, தப்புதாம்மா. அப்படிக் கேட்டது தப்புதான், ஒத்துக்கறேன். மன்னிச்சுடு. ஏதோ இப்பவானும் விமலா மேலே உனக்குப் பரிதாபம் பிறந்துதே."

"எப்பவுமே அவ மேலே எனக்குப் பரிதாபம்தான். பாவம். அப்பா அம்மா இல்லாத அனாதையாச்சேன்னு இரக்கம்தான் படுவேன். நடுல என் நாக்குல சனிதான் பூந்துண்டு என்னென்னமோ பேச வைச்சுடுத்து. அதுக்காக இப்போ வருத்தப்படறேண்டா. விமலாவை நினைச்சா கஷ்டமா இருக்கு. நிச்சயதார்த்தம் பண்ணின வேலைப் பையன் இறந்துட்டான். இனிமே யாரும் அவளைக் கல்யாணம் பண்ணிக்க முன்வரப் பயப்படுவா! ஒரு தப்பும் பண்ணாமலே துரதிர்ஷ்டக்காரிங்கற பட்டம் அவளுக்கு வந்துடுத்து. அதை நெனச்சாத்தான் கஷ்டமாயிருக்கு..."

"நீ என்னப்பா வைத்தியமாட்டம் பேசறே? அவனுக்கு அதிர்ஷ்டம் அவ்வளவுதான். அதுக்கு விமலா என்ன பண்ணுவாள்? அவளைக் கல்யாணம் பண்ணிண்டு வாழ அவனுக்குத்தான் கொடுத்து வைக்கலே. என்னைப் பொறுத்தவரை அவன்தான் துரதிர்ஷ்டம் பிடிச்சவன்னு தோணறது..."

"அப்படின்னா அவளைக் கல்யாணம் பண்ணிக்கப் போறவன் அதிர்ஷ்டசாலிங்கறயா?"

"கண்டிப்பா."

"அப்போ ஒண்ணு செய். நீயே அவளைக் கல்யாணம் பண்ணிக்கோயேன்."

அதிர்ந்து போய்த் திரும்பிப் பார்த்தான் முரளி.

அம்மா ஏதோ திட்டம் போட்டுத்தான் பேசுகிறாளோ என்று அவனுக்குத் தோன்றியது.

"என்னம்மா இது. என்ன பேச்சு பேசறே நீ?" என்றான் அதட்டலாக.

"ஏன், நா சொன்னதுல என்ன தப்பு? அவளைப் பண்ணிக்கறவன் அதிர்ஷ்டசாலின்னு சித்த முந்தி நீயேதான் சொன்னே. உங்கண்ணாவோட ஆசையை நிறைவேத்தணும்னு நீதானே பாடுபட்டு ஒரு ஆசையை நிறைவேத்தினே. இப்போ அவளை நீயே கல்யாணம் பண்ணிண்டு அதிர்ஷ்டசாலியா இருந்து அண்ணாவோட இன்னொரு ஆசையையும் நிறைவேத்தேன்?"

அம்மா குத்தலாகப் பேசுவதாகப் பட்டது அவனுக்கு..

இவள் மாறவில்லை. பணம் போய்விட்ட எரிச்சல் இன்னும் இவள் மனத்தில் இருக்கிறது. போய்விட்ட பணம் மறுபடியும் தன்னிடமே வந்துவிட வேண்டும் என்று திட்டம் போட்டுத்தான் இப்படிப் பேசுகிறாள். இல்லையென்றால் விமலாவின் மேல் இவளுக்காவது பரிதாபம் வருவதாவது?

யாராவது அவளைத் திருமணம் புரிந்து கொண்டால் பணம் அவனுக்குப் போய்ச் சேரும். அப்படி விட இவளுக்கு மனது வரவில்லை. என்னையே அவளுக்குக் கல்யாணம் பண்ணி வைத்து அதன் மூலம் இழந்த செல்வத்தைப் பெறுவதுதான் இவளது நோக்கம். இப்படி நினைத்த முரளிக்குக் கொஞ்சம் அதிர்ச்சியாகவே இருந்தது. ஏன் இந்த அம்மா இப்படி மாறிவிட்டாள்? என்று வருத்தப்பட்டான்.

"என்ன யோசனை முரளி? உங்கம்மா சொன்னதையெல்லாம் நானும் கேட்டுண்டுதான் இருந்தேன். அதுல எந்தத் தப்பும் இல்லே. சரின்னு சொல்லுங்க."

திடீரென்று முன்னால் வந்து நின்ற உமாவைப் பார்த்ததும் அவன் திகைப்பும் அதிர்ச்சியும் பன்மடங்காகியது. உமாவுமா அம்மாவின் எண்ணத்தைப் புரிந்து கொள்ளாமல் அதை நல்லது என்று கூறுகிறாள்?

அவனுடைய ரத்த நாளங்களை வெடித்துவிடும் போல் திடீரென்று ஒரு தலைவலி வந்தது. கண்கள் சிவக்க எந்தப் பதிலும் கூறாதவன் விருட்டென்று எழுந்து வெளியே சென்று விட்டான்.

அரை நாள் இதற்காகவே லீவு போட்டுவிட்டு வந்த உமா திகைத்து நின்றாள்.

(தொடரும்)

மனைவியின் பிறந்த நாளை ஞாபகத்தில் வைத்துப் பரிசு அளிப்பதும், திருமண நாள் அன்று எதிர்பாராத பரிசுகளைக் கொடுப்பதும் குடும்ப உறவினை வலுப்படுத்தும். குறைந்தபட்சம் ஒரு வாழ்த்து கூட மனைவியின் மதிப்பில் உயர்த்தும்.

வேலைக்குப் போகும் பெற்றோர் தங்கள் குழந்தைகளுக்குத் தங்களுடைய வேலையைப் பற்றி, வீட்டிலிருக்கும் மற்ற தாய்மார்கள் போலத் தங்களால் கவனிக்க முடியாத சூழ்நிலையைப் பற்றி அவர்களிடம் பேசி மனத்தளவில் அவர்களைத் தயார் செய்ய வேண்டும்.



# ஓர'கத்தி'களிடையே ஒற்றுமை!

பல குடும்பங்களில் திருமணம் ஆகும் வரை சகோதரர்கள், இராம லட்சுமணர்கள் போல இருப்பார்கள். ஆனால் வருகின்ற மனைவிகள் சீதா, ஊர்மிளா போல இருப்பதில்லை. அது சீதைகளின் மீது தப்பா, இராமர்களின் தப்பா என்பதைவிட திருமணம் அண்ணன் தம்பி உறவுகளைப் பிரித்து விடுகிறது என்பதுதான் உண்மை.

அவரவர்களுக்குக் குடும்பம், குழந்தை என்றான பிறகு ஏராளமான பிரச்னைகள் 'என் புருஷன் பெரிய ஆபீசர்!' 'என் வீட்டுக்காரர்தான் உங்களுக்கெல்லாம் சம்பாரிச்சுக் கொட்டணுமா!' இப்படிப் பேச்சுக்கள். கிராமங்களில் சகோதரச் சண்டை, பாகப் பிரிவினை என ஏக தடபுடல்தான்.

மேலைநாடுகளில் ஒவ்வொருவருக்கும் திருமணம் ஆனவுடனேயே தனியாகக் குடும்பம் அமைத்துக் கொடுத்து விடுகிறார்கள். ஆனால் நம்முடைய நாடு தாயின் அன்பின் அடிப்படையில் கட்டப்படும் இல்லறங்களைக் கொண்ட நாடு. அவ்வளவு எளிதாக உறவுகளைப் பிரிய முடிவதில்லை. மிகுந்த மனக் கசப்புக்கள் ஏற்பட்ட பிறகே குடும்பங்கள் பிரிகின்றன.

வம்புதும்புகள் எதிலும் மாட்டிக் கொள்ளாமல் சிநேகத்தோடு, சகோதர வாஞ்சையோடு பழகுகின்ற நான்கு சகோதரர்கள் கொண்ட குடும்பம் இதோ! அதில் இருவருக்குத் திருமணம் ஆகிவிட்டது.

'மாமியார் மருமகள் சண்டை என்பதோ ஓரகத்திகள் சண்டையோ, நாத்தனாருடன் மனஸ்தாபமோ இந்தக் குடும்பத்தில் வந்ததில்லை. அதற்குக் காரணம், ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் மனப்பான்மைதான்' என்கிறார் குடும்பத் தலைவர் சங்கரன்.

"என்னுடைய கணவரின் சகோதரரின் மனைவியை (ஓரகத்தியை) நான் சகோதரியாகத்தான் மதிக்கிறேன். அவள் வளையல் வாங்கினாலும் சரி, புடைவை வாங்கினாலும் சரி என்னிடம் சொல்லிவிட்டுத்தான் வாங்குவாள். வாங்கி வந்ததும் ஆசையாக அம்மாவிடமும் (மாமியாரை அப்படித்தான் அழைக்கிறார்கள்) என்னிடமும் காண்பிப்பாள். நாங்களும் அவள் அணிவதைப் பார்த்துச் சந்தோஷப்படுவோம். பொறாமைப் படுவதில்லை. இதனால் ஒன்றைத் தெரியாமல் செய்ய வேண்டும் என்ற எண்ணமே எங்களுக்கு ஏற்படாது" என்றார் மூத்த மருமகள் ரதி.

"எங்கள் வீட்டில் யாரிடமும் தான் என்ற அகம்பாவம் இல்லை. நீ உயர்ந்தவன், நான் தாழ்ந்தவன் என்ற மனப்போக்கு இல்லை. நான் பட்டதாரியாக இருந்தாலும் மன்னியிடம் எதையும் கேட்டே செய்வேன். என் கணவர் வங்கி அதிகாரி, அவள் கணவர் வியாபாரம் செய்பவர் என்பதெல்லாம் எங்களுக்குள் வேற்றுமையை ஏற்படுத்தியதில்லை" என்கிறார் இரண்டாவது மருமகள் விஜயலெட்சுமி.

"கறிகாய் நறுக்குவதாக இருந்தால்கூட ஒருவர் நறுக்குவதை இன்னொருவர் வேடிக்கைப் பார்த்துக் கொண்டுதான் என் மருமகள்கள் செயல்படுவார்கள். ஒருத்தி சமையலில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டால், இன்னொருத்தி மற்ற வீட்டு வேலைகளில் தன்னை ஈடுபடுத்திக் கொள்வாள். இதை நீ செய், இதை நான் செய்கிறேன் என்று திட்டமிட்டுக் கொள்வார்கள்" என்கிறார் மாமியார்.

நாத்தனாரின் கலப்புத் திருமணம், இரண்டாவது மைத்துனர் வீட்டோடு உதவி செய்வது, நான்காவது மகனின் கல்லூரிப் படிப்பு என எல்லாமும்தான் இருக்கின்றன இந்தக் குடும்பத்தில். ஆனால் அன்பு எனும் கயிற்றால் ஒருவரை ஒருவர் கட்டிக் கொண்டு சந்தோஷமாக வலைய வருகிறார்கள்.

சகோதரர்களின் மனைவிமார்களிடம் பிரச்னைகள் முதலில் சமையல் கட்டில்தான் எழும்பும். ஒருவரே அதிகம் வேலை செய்வதும், மற்றவர் கண்டும் காணாமலும் இருப்பதும் பிரச்னைகளை விசிறும். அதிலும் படித்த மருமகள் வேலைக்குப் போனால் முழுமையாக அவளால் வீட்டுப் பணிகளில் ஈடுபட முடியாது.

காலமெல்லாம் அடுப்படியில் முதல் மருமகள் உழைத்து, மைத்துனரின் குழந்தைகளை வளர்த்து, கஷ்டப்பட்டு, கடைசியில் அலட்சியப்படுத்தப்படும்போது அவள் விழித்துக் கொள்கிறாள். பிறகு பிரச்னைகள்தான்.

ஓரகத்திகளின் பிரச்னைகளுக்கு பெரும்பாலும் மாமியார் காரணமாவதுண்டு. சீர்வரிசைகளோ, படிப்போ, சம்பாதிப்பதோ ஒருவருக்கொருவர் மாறும்போது அதைப் பிடித்துக் கொள்கிறார் மாமியார். ஒருவரின் முன்பே இன்னொருவரை குறைவாக விமரிசிப்பார். இதனால் கடைசியில் தனக்குத்தான் கஷ்டம் என்பதை அவர் உணருவதில்லை. சின்னச் சின்ன இந்த விஷயங்களே நாளை பெரிதாகப் போய் தான் பெற்ற பிள்ளைகளே பிரிந்து போவார்கள் என்பதை அவர் உணருவதில்லை.

நான்கைந்து திருமணமான சகோதரர்கள் வாழும் இல்லத்தில் சில அடிப்படை விஷயங்களை கொள்கையாகவே கொள்ளலாம்.

1. ஐந்து விரல்களும் ஒன்று போல இருப்பதில்லை. ஒவ்வொருவர் ஒவ்வொரு படிப்பு, உத்தியோகம் என இருக்கலாம். அதனால், உசத்தி, தாழ்த்தி என்பது கிடையாது எனத் தெரிந்து கொள்ள வேண்டும்.

**குழந்தைகளும், கணவனும் சின்னச் சின்ன வேலைகளைச் செய்வதும், கூடுமான வரை தங்கள் தேவைகளைத் தாமே பூர்த்தி செய்து கொள்வதும் மனைவியின் டென்ஷனைக் குறைக்கும்; அவளால் சந்தோஷமாக இருக்க முடியும்.**

2. ஓரகத்தியின் குழந்தையை முதலில் கவனித்தால் தன்னுடைய குழந்தையை முதலில் அவள் கவனிப்பாள் எனக் கொள்ளலாம்.

3. கணவன், மனைவி வெளியில் சென்று ஏது வாங்கி வந்தாலும் மற்றவர்களுக்குச் சொல்லலாம். குடும்பத்தில் மற்றவர்கள் அதை மகிழ்ச்சியோடு வரவேற்க வேண்டும். 'இவளுக்கு என்ன இப்ப பட்டுப் புடைவை!' என முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டால் அடுத்த முறை ஏதேனும் வாங்கும் போது, மறைக்கத் தோன்றும். இங்கிருந்து ஆரம்பித்து நாளடைவில் விரிசல் பெரிதாகும்.

4. சமையலறையில் இந்த இந்த வேலை இவர்களுடையது என பகிர்ந்து கொள்ளலாம். உடல் நலம் சரியில்லை என்னும்போது, 'வேணுமின்னே வேஷம் போடறா' என மறைமுகமாகப் பேசுவதைத் தவிருங்கள். அவள் வேஷமே போட்டாலும், உங்களுடைய அன்பான உபசரிப்பால் அவள் அடுத்தமுறை அந்த மாதிரி செய்ய மாட்டாள்.

5. குழந்தைகளின் சண்டைகளை கண்டு கொள்ளாமல் இருந்துவிட வேண்டும். குழந்தைகள் நாளை சேர்ந்து விடுவார்கள். ஆனால் உங்களுக்குள் ஏற்பட்டுவிடும் கசப்பை மாற்றவே முடியாது.

6. சின்னச் சின்ன பரிசுகளை ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொள்ளலாம். ஓரகத்தியின் திருமண நாளில் நீங்கள் தரும் சிறிய சென்ட் பாட்டிலால் உங்களுக்குள் உறவு எப்படி மணக்கிறது என்று பாருங்கள்!

7. ஓரகத்தியின் பிறந்த வீட்டினர் வரும் போது, அவளை அவர்களுடன் பேசவிட்டு விட்டு, நீங்கள் வேலைகளைப் பாருங்கள்.

8. இப்படிச் சின்னச் சின்ன விஷயங்களில் ஒருவருக்கொருவர் பகிர்ந்து கொள்வதால் வாழ்க்கையே எப்படி சந்தோஷமாக மாறுகிறது என்று பாருங்கள்.

9. கூடியவரை பண விஷயத்தை சகோதரர்களிடமே விட்டுவிட்டு நீங்கள் ஒதுங்கி விடுவது நல்லது.

— **ஹரிதன்**

புகைப்படம்: **பிரபுசங்கர்**



# தீபாவளி பட்சணங்கள்

'சித்ரா'



வெண்ணெய் விலை இப்போதே 40 ரூபாய். இறங்குமா? நாம்தான் விலையைப் பார்த்துக் கிணற்றில் இறங்க வேண்டும். எனவே நெய் செலவின்றி 'ஸ்வீட்ஸ்' தயாரிக்கலாமே! வயிற்றுக்கும் நல்லது.

## வேர்க்கடலை கோக்கனட் டஃபி

தேவையான பொருட்கள்: வேர்க்கடலை (வறுத்துத் தோல் நீக்கிச் சொத்தை இல்லாதது) — 1 கப், துருவிய தேங்காய் — 1 கப், (மூடியை ஃப்ரிஜ்ஜில் வைத்துவிடவும். நீர்ப் பசையில்லாத் துருவலாக எடுக்கவும்). சர்க்கரை — $2\frac{1}{2}$ கப், வெண்ணெய் அல்லது டால்டா — 4 ஸ்பூன், ஏலம் — 1, பச்சைக் கற்பூரம் — சிறிதளவு, கடலை மாவு — 2 ஸ்பூன், பால் — 1 கப்.

செய்முறை: வேர்க்கடலையை மிக்ஸியில் உடைக்கவும். கனமான உருளி அல்லது குக்கர் பானில் சர்க்கரை மூழ்கும் வரை பாலும் நீரும் விட்டுப் பாகு வைக்கவும். பாகு ரெட்டைக் கம்பி பதம் வரும் சமயம் வேர்க்கடலை, தேங்காய்த் துருவலைப் போட்டுக் கிளறவும். சற்று சேர்ந்தாற் போல் வரும் சமயம் கடலை மாவைத் தூவி, ஏலம் பச்சைக் கற்பூரம் (இருந்தால் போடலாம்) போட்டுக் கிளறவும். நெய் தடவிய தட்டில் கொட்டிக் கட்டிகள் போடவும்.

## கஸ்கஸ் பர்பி

கசகசா உடலுக்குக் குளிர்ச்சி. கொஞ்சமாகச் செய்தாலே நிறையக் கட்டிகள் கிடைக்கும்.

தேவையான பொருட்கள்: கசகசா — $\frac{1}{2}$ கப், தேங்காய்த் துருவல் — $\frac{1}{2}$ கப், முந்திரி — 10, சர்க்கரை — 1 கப், பால் — $\frac{1}{2}$ கப், கோகோ — 1 ஸ்பூன், நெய் அல்லது டால்டா — 4 ஸ்பூன்.

செய்முறை: கசகசாவைச் சுத்தம் செய்து முந்திரிப் பருப்புடன் அரைமணி ஊற விடவும். அம்மி அல்லது கல்லுரலில் நைஸாக அரைக்கவும். ஊற வைக்கும் போது அளவான நீர் போதும். கல்லுரலில் பாலை விட்டு அலம்பி எடுக்கவும்.

தேங்காயை அரைக்கவும். அடுப்பில் கனமான உருளியில் சர்க்கரை அமிழும் வரை ஜலம் விட்டுப் பாகு செய்யவும்.

பாகு கம்பிப்பதமானதும் விழுதுகளையும் அரைத்த தேங்காயையும் போட்டுக் கிளறவும். நல்ல கெட்டியாக வரும் சமயம் நெய் விடவும். மேலே பூத்து வரும் சமயம் இறக்கிக் கிளறவும். நெய் தடவிய தாம்பாளத்தில் கொட்டி ஆறியதும் துண்டு போடவும்.

இறக்கிக் கிளறும் போது கோக்கோ போடவும்.

## வெரைட்டி ஹல்வா

தேவையான பொருட்கள்: ரவை — 1 கப், கோதுமை ரவை — 1 கப், பால் — 1 கப், சர்க்கரை — 3 பங்கு, ஏலக்காய் — ஒன்று நெய் அல்லது டால்டா — அரை கப், நேரம் 15 நிமிடம். கேசரி பவுடர் — சிட்டிகை.

செய்முறை: கோதுமை ரவையையும், ரவையையும் தனித்தனியே ஊறவிட்டு மிக்ஸியில் பால் எடுக்கவும். அரை மணி நேரம் வைக்கவும். பாலின் மேல் நீர் தேங்கும். இதைத் தனியே எடுத்து வைக்கவும்.

பாலில் சர்க்கரையைப் போட்டுப் பாகு வைக்கவும். நல்ல கெட்டி நிலையில் இறுத்துள்ள பாலே விடவும்.

தனி அடுப்பில் இறுத்த நீரைக் கொதிக்க விட்டு அடிக்கடி இந்தப் பால் அல்வாவில் விடவிட பால் நன்கு வேகும். அல்வா பதமாகி வரும். நெய் குறைவாகச் செலவாகும்.

அடுப்பு நிழலாக எரிவது முக்கியம். நெய்யை ஒவ்வொரு ஸ்பூனாக விடவும். அல்வாவைத் தூக்கிப் பார்த்தால் கெட்டியாக விழாமல் வரும் சமயம் கேசரிப் பவுடரைத் துளி பாலில் கரைத்து ஏலப்பொடி போட்டு அல்வாவில் விடவும்.

நெய் தடவிய தட்டில் கொட்டவும். முந்திரிப் பருப்பு போடுவது இஷ்டம் போல். அதிகம் கிளறாமல் 'அல்வா' ஜம்மென்று துண்டாகி வரும்.

## ஸெவன் ஸ்டார் கேக்

தேவையான பொருட்கள்: மைதா — 1 கப், தேங்காய்த் துருவல் — 1 கப், பால் — 1 கப், நெய் — 1 கப், சர்க்கரை — 3 கப், ஏலக்காய் — தேவைக்கேற்ப.

செய்முறை: மைதாவை வெறும் வாணலியில் வறுக்கவும். அல்லது நெய் அல்லது டால்டாவை நல்ல சூடுபடுத்தி மைதாவைப் போட்டு அப்படியே வைத்துவிடவும்.

காலையில் எழுந்திருக்கும்போதே டென்ஷன், பரபரப்புடன் ஆரம்பித்து வீட்டை குருக்ஷேத்திரமாக மாற்ற வேண்டாம். தாமதமாக எழுந்த அன்று மற்றவர்களிடம் சொல்லி வேலையைப் பகிர்ந்து கொள்ள வேண்டும். ஓரிரு நாட்கள் என்றால் எல்லாரும் உதவி செய்வார்கள். குழந்தைகளையும் விட்டு வேலையில் பங்கேற்கச் செய்ய வேண்டும்.

தேங்காய்த் துருவல், பால், சர்க்கரை இவற்றை மைதா மாவுடன் சேர்த்துக் கலக்கவும். கனமான பாத்திரத்தில் செய்யவும்.

அடுப்பை நிதானமாக எரிய விட்டுக் கலவையை வைத்துக் கிளறவும். பத்து நிமிஷத்தில் கைக்குக் கனமாகி வரும். அதுசமயம் அடுப்பை விட்டு இறக்கிக் கிளற வேண்டும். அதிகத் தீ கூடாது. நெய் தடவிய தட்டில் கொட்டி வில்லைகள் போடவும். 1 கப் அளவுக்கு (மேலே சொன்ன அளவுக்கு) சுமார் 40 வில்லைகள் வரும். சின்ன தீபாவளிக்குப் போதுமே.

## அங்கூரிபூந்திலட்டு

பகவான் ஸ்ரீ கிருஷ்ணனுக்குச் சர்க்கரைப் பண்டத்தை விட வெல்லமே உசிதம்., தீபாவளியே கண்ணன் நரகாசுர வதம் செய்ததை ஒட்டித்தானே. எனவே வெல்லத்தில் செய்யலாமே. அங்கூரி பூந்தி அருமையாக இருக்கும். உடல் சிரமம் இல்லே.

கால் கிலோ உளுத்தம்பருப்புக்கு எட்டு டம்ளர் அரிசி கணக்கில் போட்டு மில்லில் மிக நைஸாக அரைக்கவும்.

நறுக்கிய வெல்லம் 2 டம்ளர், ஏலக்காய்ப்பொடி—கொஞ்சம், முந்திரிப்பருப்பை சீவி நெய்யில் பொறித்தது — 1 கப், முந்திரி விலே அதிகம் என்றால் நிலக்கடலேயை மிக்ஸியில் (தோல் நீக்கி நெய்யில் பொறித்துப் போடலாம்.)

உப்புப் பொடி — ஒரு துளி, எண்ணெய் — அரை லிட்டர், சோடா உப்பு — சிட்டிகை, ஜாரிணி, பூந்திக் கரண்டி தேவை.

அரைத்த மாவை பஜ்ஜி மாவு கலப்பது போல் கலக்கவும். சோடா உப்பையும் துளி ஸால்ட் பொடியையும் போடவும். அடுப்பில் எண்ணெய் வைத்துக் காய்ந்ததும் லட்டுக்குத் தேய்ப்பது போல் முத்துக்கள் எடுக்கவும்.

அடுத்த அடுப்பில் வெல்லப் பாகு வைத்து இரண்டு கம்பி பதத்தில் அடுப்பை நிறுத்தி சேர்த்த முத்துக்கள் நிலக்கடலே அல்லது முந்திரியைப்போட்டுக்கலக்கவும்.சூட்டோடு உருண்டை பிடிக்கவும். ஸ்ரீ கண்ணனுக்குப் பிடித்த நிவேதனம்.

## தீபாவளி லேகியம்

ஓமம் — 10 கிராம், சுக்கு — 1 துண்டு, கண்டந்திப்பிலி, அரிசித் திப்பிலி — 10 கிராம், மிளகு — 10 கிராம், தேன், வெல்லம் திட்டமாக, நெய் — அளவாக, சீரகமும் போடலாம். கடுக்காய்ச் சிவல் கொஞ்சம், எல்லாவற்றையும் நன்கு ஊற விடுங்கள். முதல் நாள் ஊறவைத்தால் நைஸாக அரைக்க வரும். துண்டு மஞ்சளும் போடலாம்.

அரைத்த விழுதை இலுப்பச் சட்டி (அலுமினியம்) யில் போட்டுக் கொஞ்சம் ஜலம்

# கவலையின்றி விளையாடு பாப்பா.

வளரும் குழந்தைகளுக்கு கீழே விழுவதோ சின்னச்சின்ன வெட்டுக்களோ. காயமோ மிக மிக சகஜம்.

இலாஸ்டோப்ளாஸ்ட். இதன் உபயோகத்திற்காகவே. குழந்தைகள் தொற்று நோய் பரவாமல் பாதுகாக்கவும் செய்யும்.

இலாஸ்டோப்ளாஸ்ட் காயத்தை பாதுகாக்கிறது. அதிலுள்ள விசேஷ மருந்து காயத்தை குணப்படுத்துகிறது.

இலாஸ்டோப்ளாஸ்ட். உங்கள் குழந்தை சுதந்திரமாக ஓடி விளையாடட்டும். கவலையின்றி விளையாடட்டும்.

**ஜே.எல். மாரிசன் சன் & ஜோன்ஸ் (இ) லிட்.**
கரிஸ்டல், 79,
டா. அன்னி பெசன்ட் ரோடு, வொர்லி,
பம்பாய்-400 018.

**Elastoplast®**

மருந்து கலந்த பிரதம சிகிச்சை பிளாஸ்திரி




Sista's-JLM-225/86 TAM A

விடவும். கொதித்து இறுகிய பின் வெல்லம் போடவும். வெல்லம் சேர்ந்து இறுகி வரும் சமயம் தேன், நெய், இவற்றைப் போட்டு இறக்கிக் கிளறவும். கைக்கு ஒட்டாத பதம் தான் பதமான லேகியம். அதிகம் அடுப்பில் வைத்தால் முறுகிவிடும். நல்லெண்ணெய் கூட விடலாம் கொஞ்சம்.

மருந்துச் சாமான்கள் கிடைக்காத ஊரில் இஞ்சி மட்டும் கூடச் செய்யலாம். இஞ்சியை அரைத்து (மிளகு, சீரகம் ஊற வைத்து அரைத்து) விழுதை இலுப்பச்சட்டியில் போட்டுக் கொதிக்கும்போது வெல்லம், நெய், தேன்; விட்டுக் கிளறி இறக்கவும். தீபாவளிக்குப் பிறகு வயிறு உப்பினால் கூட இந்த லேகியம் பலன் தரும். உடம்பில் வாய்வு கொள்ளாமல் இருக்கும். அடிக்கடி இந்த லேகியங்கள் செய்து வைக்கலாம்.

**கார வகை**

## ஸ்டப்டு பஜ்ஜி

தீபாவளியன்று ஒரு சில வீடுகளில் பஜ்ஜி போடுவதுண்டு. மிளகாய் பஜ்ஜி போடலாமே. சுறுசுறுவென்று இருக்கும்.

நீள மிளகாயைத் தேர்ந்தெடுங்கள். ஓமத்தை இடித்துக் கடலே மாவுடன் உப்பு சேர்த்துப் பிசிறி வைக்கவும்.

மிளகாயை ஊசியினால் ஜாக்கிரதையாக ஒரு கீறு கீறவும். உள் விதையை எடுக்கவும்.

லேசான புளித் தண்ணீரைக் கொதிக்க விட்டு இறக்கவும். கீறிய மிளகாயைப் போட்டு மூடவும். 1 நிமிடம் கழித்து வடித்து விடவும். காரம் போய்விடும்.

ஆறியபின் பிளவான உட்பகுதியில் பிசிறிய கடலே மாவைக் கொஞ்சம் திணிக்கவும்.

வழக்கமான பஜ்ஜி மாவு கலந்து வைத்துக் கொண்டு, அடைத்துள்ள மிளகாயைத் தோய்த்து எண்ணெயில் பொறிக்கவும்.

பஜ்ஜி அற்புதமாக இருக்குமே!

## மைதா சேகு

வடநாட்டில் பார்த்தால் ஏ[illegible]றாக் குழல் முறுக்கு அச்சில் பிழிந்து வாய[illegible] ஊறும். போட்டவுடன் கரையும்.

மைதா மாவை அரை கிலோ 'வேட்டில்' ஆவியில் துணிமுடிச்சில் வேக விடவும்.

அரைக் கிலோ மாவுக்குக் கால் கிலோ அரிசி மாவு கலந்து உப்பு, மிளகுத் தூள், சீரகம், பெருங்காய நீர் விட்டுப் பிசையவும். தேன்குழல் மாவு மாதிரி பக்குவம்.

கனமான ஒற்றை அச்சில் பிழியவும். அருமையாக இருக்கும்.

## கார பிஸ்கட்

தேவையான பொருட்கள்: கோதுமை — 1 கப், மைதா — 1 கப். சேர்த்து ஆவியில் வேக விடவும். கடலே மாவு பச்சையாக 1 கப் சேர்த்து மிளகாய்த் தூள், உப்புப் போட்டுப் பிசையவும். ஒரு கரண்டி கொதிக்கும் எண்ணெய் விடவும். சன்னமாகக் கறிவேப்பிலே கிள்ளிப் போடவும். அப்பளமாக இட்டு சமோசாக் கரண்டியினால் துண்டுகள் போட்டு எண்ணெயில் பொறித்து எடுங்கள். வாய்க்குக் கரகரவென்று இருக்கும்.

## மதுர் தட்டை

ரவை — 1 கப், மைதா — 1 கப், அரிசி மாவு — 1 கப், மிளகு, சீரகப் பொடி, கொத்துமல்லித் தழை, பொறிக்க எண்ணெய், உப்புப் பொடி — அளவாக.

ரவையை வறுக்கவும். மைதாவை வறுக்கவும். அரிசிமாவுடன் நன்கு பிசைந்து ஒரு கரண்டி சூடான எண்ணெய் விடவும். மிளகு சீரகம், கொத்துமல்லித் தழை, உப்புப் போட்டு நன்கு பிசையவும்.

வாழை இலேயில் எண்ணெய் தடவி சிறு சிறு கோலியாக உருட்டி இலேயில் ஆள் காட்டி விரலால் அழுத்தவும். பட்டணே விட ஒரு சுற்று அதிகம் வரும் அளவில், எண்ணெயில் போடவும். கரகரப்பாக ருசியாக இருக்கும். பக்கத்து வீடுகளுக்கு ஒரு பிடி எடுத்து வைத்தால் தாராளம் தெரியும்.

மூர்த்தி சிறிது. கீர்த்தி பெரிதைக் கொடுக்கும்.

வயதான மாமியாரிடம் 'எப்படி பொழுது போனது?' என்றும் மாமனாரிடம் உடல்நிலேயைப் பற்றியும் விசாரித்து வையுங்கள் — ஆபீஸிலிருந்து திரும்பியவுடன். ஏதாவது மனக்குறை இருந்தால் நீங்களும் சரி, அக்கம் பக்கம் சொல்ல வேண்டாம். அக்கம் பக்கத்தவர் உங்கள் மாமியார் சொன்னவற்றைச் சொல்ல முயற்சிக்கும் பொழுது காதிலே வாங்கிக் கொள்ள வேண்டாம். சிலவற்றைத் தெரிந்து கொள்ளாமலே இருந்தால் பிரச்னேகளும் குறைவு. பக்கத்து வீட்டில் மாமியார் உங்களே ரொம்ப செலவு செய்யறு' என்று சொல்லியிருக்கலாம். ஆனல் அது உங்களிடம் வரும் பொழுது காது, கண் வைத்து உருவெடுக்கலாம். அதைக் கேட்டவுடன் மாமியார் மீது கோபம் வரும். உங்கள் கோபத்தினே சமையலில், வேலேயில் காட்ட வேண்டி வரும். ஜாடை மாடையாக முணுமுணுப்பு இப்படி வேண்டாத சங்கிலித் தொடரான நிகழ்ச்சிகள் உருவாகும். நேராக சம்பந்தப்பட்டவர்களிடமே பேசித் தெரிவித்து விட்டால் இருவருக்கும் மனபாரம் குறையும்.

அழகான வீடு, உயரமான சீலிங். உள்ளே ஜில்லென்றிருக்கிறது.

கல்லு கல்லாய் ரோஸ்வுட்டில் பர்னிச்சர், பழங்கால மோஸ்தரில் கடைசல் பிடித்து, பூ வேலைப்பாடுகளுடன்.

சுவரில் ஆளுயரப் படங்கள். மும்முடி கிருஷ்ணராஜ உடையார், ஜெய சாமராஜ உடையார்... இன்னும் யாரோ — கழுத்தில் ராஜாங்கச் சின்னமான அண்ட பேரண்ட பதக்கத்துடன் சங்கிலி, நீண்ட கோட்டின் மேல் அங்க வஸ்திரம், லேஸ் தலைப்பாகை — அசல் மைசூர் பாணியில் தோற்றம். வீட்டில் தனியாக ஒரு களை தெரிகிறது.

''எப்படி மானேஜ் பண்றீங்க...?''

''என்னையா... வீட்டையா...?''

''ரெண்டையுந்தான்...''

''வீட்டை கவனிச்சுக்க, வேண்டிய ஆள் இருக்கா. டி. நரசிப்பூர்லேர்ந்து அம்மாவும் அடிக்கடி வந்து பார்த்துப்பாங்க. இப்ப கூட பதினைஞ்சு இருபது நாளா இங்கேதான் இருந்துட்டு நேத்திக்குத்தான் கிளம்பிப் போனாங்க. நிலத்தையும் விட்டுட முடியாதே. அங்கேயும் பெரிய வீடு இருக்கு. என்னை... என்னை எப்படி மானேஜ் பண்றேன்னு கேட்டா.... கொஞ்சம் சிரமப்பட றேன்னுதான் சொல்லிக்கணும். கட்டுப் பாடே இல்லாம இத்தனை நாள் சுதந்திரமா இருந்துட்டேனா...ஒழுங்காயில்லாம போயி டுத்து... அதனாலே கொஞ்சம் டிஸிப்ளினும் பண்ணி, அக்கறையாகவும் மானேஜ் பண்ணக் கூடிய ஆளாப் பார்த்து, ஒப்படைச் சுடணும்னுதான் பார்த்தேன். என்னமோ வேளை வரல்லே...''

மனம் அந்த பதிலைக் கேட்டு அலைமோத, காதம்பரி, பிரபுவை ஏறிட்டுப் பார்க்கிறாள். ஜன்னலிலிருந்து பக்கவாட்டில் வந்த வெளிச் சத்தில் அவன் கண்ணில் விழிகள் துல்லிய மாய்த் தெரிகின்றன. நடு பாப்பாவில் சின்ன தாய் அவள் பிம்பங்கள் தெரிய, அவள், அவனையே பார்க்கிறாள்.

''கொஞ்சம் பேசணும்னேன்...''

''இங்கேயே உக்காந்துக்கலாமா... மேலே போகலாமா... மேலேயே போகலாம்...''

கைதட்டி ஆளையழைத்துக் காப்பி கொண்டு வரச் சொல்லிவிட்டு, அவன் முன் செல்ல, அவள் பின் தொடருகிறாள். கூடத்தை அடுத்த நடையில் மாடிக்குப் படி ஏறியதும் மேலே இருபுறமும் அறைகள். தாண்டி, நீண்ட வராந்தா, கைப்பிடி சுவரைத் தொட்டுக் கொண்டு வேப்ப மரம் குடை விரித்திருக்கிறது. அருகிலிருந்த நாற்காலி களை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்காருகிறார்கள்.

மரக்கிளையிலிருந்த ஒற்றைக் காக்கை கழுத்தைச் சாய்த்து இவர்களை ஓரப் பார்வை பார்த்துவிட்டு, பிறகு ஒட்டுக் கேட்க வேண்டாமென்று பறந்து போகிறது.

''ஸோ, யூ மெட் நித்யானந்த்.''

''ம்ம்...''

''எங்கே பார்த்தீங்க...? என்ன சொன்னாப்பல, வேறே ஒண்ணும் சொல்லலியா...?''

''அங்கதான், விமலா வீட்டுக்கிட்டேதான். ஏதோ டிரைவரைக் காணம்னு தேடிக்கிட் டிருந்தார். உன் வீட்டுக்கு வந்ததாச் சொன்னார். எப்படித் தெரியும்னதுக்கு... ஹஸ் பண்டுக்கு வொய்பைத் தெரியாதான்னார்... அவ்வளவுதான்...''

''அப்படியா சொன்னார்...? பலே! எக்ஸ் ஹஸ்பண்டுன்னு சொல்லக் கூச்சமாயிருந்தது போலிருக்கு. நான் டைவோர்ஸ் வாங் கிண்டதைச் சொல்லல்லே...''

டைவோர்ஸ்!

தோன்றவேயில்லையே! அப்படியிருக்க லாமோவென்று சந்தேகம் கூட வராமல் என்னவெல்லாம் நினைத்துச் சங்கடப்பட் டான்.

அப்படியே நெகிழ்ந்து போகிறான் பிரபு.

''காதம்பரி...''

அவன் அழைப்பில் உணர்ச்சி இருந்தது. பார்த்த பார்வையில் ஆதங்கம் இருந்தது. இத்தனை நாள் பழக்கத்திலும் இப்படி ஓர் உள்கதை இருக்கக் கூடும் என்றே தோன் றாமல் இருந்ததே. நல்லவேளை, இப்போதாவது தெரிய வந்ததே. இன்னமும் என்ன வெல்லாமோ மடத்தனமாக நினைத்துக் கொண்டிராமல்...

''காதம்பரி... ஸாரி... காதம்பரி, ரொம்ப ஸாரி...''

குரல் இதமாய் ஒலிக்க, மென்மையாய் ஒற்றிக் கொடுப்பது போல் வந்த அவன் அழைப்பு காதில் இறங்கி, கருத்தில் தோய —

22

# கோடுகள் கோலமாவதில்லை..

கோமளா வரதன்



ரசாயன சேர்க்கை ஏற்பட்டது போல் மணம் பொங்கி ஆர்ப்பரிக்கிறது. உணர்ச்சிகள் முந்த, அவளுடைய கட்டுப்பாடு கலகலத்துப் போகிறது. அந்த உணர்ச்சி வேகத்தில், ஆதியோடந்தமாய் அத்தனையையும் இவனிடம் சொல்லிவிட வேண்டுமென்று ஆரம்பிக்கிறாள்.

தொடங்கியதுதான் சாக்கு. ஆழத்திலிருந்து அடித்துப் புரட்டிக் கொண்டு வருகிறது... ஒன்றிலிருந்து ஒன்றாய், சங்கிலித் தொடராய் கிளைத்துக் கிளைத்து வருகிறது... ஒன்றைச் சொல்ல மற்றொன்று தானே வருகிறது.

அழகு, திறமை, பணம், படிப்பு அவளுக்கு எது இல்லை? எல்லாம் இருந்தும் வாழ்வு முழுக்க சதா ஒரு தனிமையும் வெறுமையும் ஏன்...?

'தாத்தாவிடம் வளர நேர்ந்த விதம், என்னதான் அவர் ஆசையைக் கொட்டி வளர்த்தாலும்ஓர் அம்மாவின் அரவணைப்புக்கு, அப்பாவின் அதிகாரத்துக்கு — அந்த அதிகாரமும் உரிமை அதற்கடங்குவதும் உரிமைதானே, கூடப் பிறந்தோரின் ஒட்டுறவுக்கு — சின்ன வயதின் சந்தோஷங்களை, உலகத்தைப் பார்த்துவாழக்கற்றுக்கொள்ளும் அனுபவங்களையெல்லாம் அவர்களோடுதானே பகிர்ந்துக் கொள்ள முடியும்...? இதற்கெல்லாம் ஏங்கியது...

நடுவில் அப்பாவாவது வந்தாரேயென்ற மகிழ்ச்சி அல்பமாய்ப் போன விதம், இளமையின் தலைவாயிலில் பருவம் வித்தை செய்ய, அந்தக் கிளுகிளுப்பை, அதன் ரகசியங்களைச் சொல்லித்தர ஒரு பெண் துணை இல்லாமல் போனதை...

இதற்கெல்லாம் வட்டியும் முதலுமான ஒரு வாழ்வைத் திருமணத்தின் மூலம் எதிர்பார்த்து ஏமாந்த அந்தப் பெரிய ஏமாற்றம்...

சாதாரணமாய் எந்தப் பெண்ணுக்கும் கிடைக்கக் கூடிய ஒரு சாதாரண மணவாழ்வு கூட இவளுக்குக் கிடைக்காதபடி. செய்துவிட்ட நித்யானந்தனின் சுபாவம், விரசமான ருசிகள், அதனால்'உண்டான தகராறுகள்.,...

''சொல்லுங்க பிரபு, இதிலே என் தப்பு என்னன்னு... நானும் எவ்வளவோ யோசிச்சுப் பார்த்துட்டேன், பிடிபடவே மாட்டேங்கறது. எல்லாத்தையும் விட்டுட்டு 'இங்கே வந்து அஞ்ஞாதவாசம் போல ஒரு வாழ்க்கை வாழறேன், விடுவேனான்னு வந்து நித்யா பூச்சாண்டி காட்டறார்...

தொடர்ந்தமௌனத்தில்இருவர் நெஞ்சங்களும்' கனத்திருப்பதை உணருகிறார்கள். ஆறுதலாய் அவன் கையை தன் கைமேல் வைத்துத் தட்டிக் கொடுக்கிறான்.

''நிதானப்படுத்திக்கோ காதம்பரி... ப்ளீஸ்...'' படியருகில் அரவம் கேட்கிறது. சட்டென்று அவள் கைகளை விடுவித்துவிட்டு

எழுந்து போகிறான். காப்பி டம்ளர்களுடன் வந்து, "சாப்பிடு... ம்..." நீட்டுகிறான்.

"நித்யானந்துக்கு நான் வாழ்க்கையிலே இடமில்லே. அவன் எதைச் சொன்னாலும் ஏன் பொருட்படுத்தணும்? நீ பாட்டுக்கு கம்முனு இருக்க வேண்டியதுதானே...?"

"முடியலேயே பிரபு... எனக்குச் சொல்லத் தெரியல்லே. மொத்தத்திலே வாழ்க்கை எப்படியெப்படியோ இருக்கணும்னு நான் நினைச்சேன். ஓர் அழகான கோலம் போல அமையணும்னு ஆசைப்பட்டேன். நிறைய முயற்சியும் பண்ணினேன். முடியலேயே. தெங்கின தண்ணி மேலே மாவை இழுத்த மாதிரி திட்டுத் திட்டாப் பிசிறி, கோடு கோடா இங்கேயும் அங்கேயும் நிக்கறதே தவிர, ஒரு கோலமாவே வரமாட்டேங்கறதே... அன்னிக்குச் சொன்னேனே என் கூட பழகறவங்கள்ளாம் நினைச்சுப் பார்க்கும்படியா நான் இருக்கணும்னு. என் உறவிலே ஓர் அனுபவங்கூட அப்படி அமையலே. கசந்து, கரிச்சுக் கொட்டி... ரொம்பப் பாவம் பண்ணியிருக்கேன் போலிருக்கு..."

ஒரு புதிய கோணத்தில் பார்ப்பது போல் பார்க்கிறான் பிரபு. அன்புக்கு ஏங்கி, பாசத்தைப் பகிர்ந்து கொள்ளத் தவித்து, பாதி விரக்தியும், பாதி அவநம்பிக்கையும் நிறைந்து விட்ட காதம்பரி... வாழ்க்கை நெடுக சந்தர்ப்பங்கள் சதி செய்துவிட்ட ஒரு பெண்...

"எனக்குக் குழந்தையில்லே, குட்டியில்லே, வாஸ்தவந்தான். நான் ஒண்டிக்கட்டையேதான். அதுக்காகக் கட்டின துணியோட நின்னுக்கிட்டு, எல்லாத்தையும் இவங்களுக்குக் கொடுத்துட்டு இருக்க முடியுமா...?"

அவள் கண்களில் கரகரவென்று கண்ணீர் வழிய, அவன் பதறிப் போகிறான்...

"ஸ்ஸ்.... காதம்பரி, என்னதிது... அழாதே... காதம்பரி..."

"உங்களுக்குத் தெரியாது பிரபு, நான் என்னவெல்லாம் கேட்டிருக்கேன்னு... திமிரு... திமிரு... எப்பப் பார்த்தாலும் திமிர்தான்... தாத்தா செல்லத்திலை திமிரு... சொத்தாலதிமிருன்னு... சொல்லிட்டேயிருப்பாங்க. எங்கே, என்னைப் பார்த்துச் சொல்லுங்க, நான் திமிர்ப் பிடிச்சா திரியறேன்...?"

"காதம்பரி..."

"என்னைப் புரிஞ்சுகண்டவங்க யாருமே யில்லே... இருந்தா சொல்ல மாட்டாங்க... ஒண்ணு சொல்றேன் கேளுங்க... இப்ப நேருக்கு நேரே நாம பார்த்துக்கறச்சே நமக்கு இருக்கிற பரிமாணம் வேறே. கொஞ்சம் உயரத்திலேர்ந்து, லைட் ஹவுஸ் மேலேர்ந்து பார்த்தா, அளவிலே சிறுத்துத்தானே தெரிவோம். அப்படி இன்னும் மேலே... மேலே, மேலே போய்ப் பார்த்தா சிறுத்துச் சிறுத்துக் கோடா, கட்டெறும்பா, சிற்றெறும்பா... புள்ளியாய்...! அப்படி பாக்கறச்சே, இந்த உலகத்திலே ஒரே நேரத்திலே எத்தனை எறும்புகள், புள்ளிகள்... கும்பல் கும்பலா... குவியல், குவியலா எத்தனை மனித எறும்புக் கூட்டங்கள். அத்தனையிலே நாம ஓர் எறும்பு.... அப்போ நம்ம பரிமாணம் என்ன... உங்களாலே நினைச்சுப் பார்க்க முடியறதா பிரபு...?"

இதோட நிக்கலே, இன்னும் சிறுத்துப் போறது அது. உலகம் ஆரம்பிச்சதிலேர்ந்து எடுத்துண்டா, எத்தனை தலைமுறை மனுஷங்க வாழ்ந்திருப்பாங்க. இன்னும் எத்தனை ஆயிரம் தலைமுறை வாழுவாங்க. அதையும் கணக்கிலே எடுத்துப் பாருங்க. அத்தனை தலைமுறையிலே, ஒவ்வொரு தலைமுறைக்கும் இத்தனை கோடி மனுஷங்கள்லே... நான் ஒண்ணுங்கறச்சே... யாருக்கு, என்ன மதிப்பு...! அப்படியொரு மொத்தத்தின், பிரும்மாண்டத்தின் முன்னாடி, மனுஷன் எப்படிச் சிறுத்துப் போறான்... ம்...? கொஞ்சம் விலகி நின்னு, இதை நினைச்சுப் பார்க்கற தெளிவு வந்துட்டா, அப்புறம் அவனாலே, என்னதான் பெரியவனா கொடி கட்டிப் பறக்கட்டுமே, அவனாலே திமிரா இருக்க முடியுமா... எதை நினைக்க திமிர்...?

வாயடைத்தாற்போல அவளையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான் பிரபு.

"எப்படி, எப்போன்னு, தெரியல்லே. ஏதோ ஒரு சமயத்திலே எனக்கு இப்படி

கணவனின் தேவை, ருசிக்கேற்ற உணவு. [illegible] இருந்தால் நிச்சயமாக உங்களுக்கு வெற்றி. 'நமக்குன்னு ஓர் ஆசை இருக்கக் கூடாதா? சமைக்கக் கொட்டவே நான் இருக்கேனு' என்று முணுமுணுக்காதீர்கள். மனைவி என்ற பாகத்தினை ஏற்ற பிறகு அனுசரித்துக் கொள்ள வேண்டாம். சுய அனுதாபம், சுய [illegible] உங்களைக் கெடுக்கும். 'கஷ்டப் படவே பிறவி எடுத்திருக்கேன்' என்று [illegible] பச்சாதாபம் [illegible] தாங்களே சொல்லிக் கொண்டால் [illegible] எல்லோர் மீதும் உங்களுக்கு எரிச்சல் [illegible] என்ன வரும்?

கணவனை முற்றிலும் மாற்றி உங்கள் வழிக்குக் கொண்டு வரவேண்டும் என்று நினைக்காதீர்கள். மற்றவர்களுடன் ஒப்பிட்டுப் பேசவதோ, அதிகமான விமர்சனங்களோ எடுபடாது. கணவனால் மனைவியும், மனைவியால் கணவனும் மகிழ்ச்சி பெற வேண்டும். அதுதான் நல்ல திருமண உறவு. எதையும் வெளிப்படையாகப் பேசித் தீர்த்துக் கொள்ள வேண்டும்..

# வாழ்வின் – உயர்விலும் தாழ்விலும்.

## ஆயுள் காப்பு– அன்பின் சின்னம்



**30 ஆண்டுகள் மக்கள் சேவையில்.**

லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா

யொரு பிரச்னை வந்துடுத்து... தாத்தாவினாலேயும் இருக்கலாம்... அதுதான் அவர் எனக்குக் கொடுத்த பெரிய சொத்தா நினைக்கறேன். ஆனா பணத்தையும், பவிஷையும் பாக்கறாங்களே தவிர, இதை அப்ரிஷியேட் பண்றவங்களே கிடையாது...''

''இந்தப் பிரச்னை வந்துட்டதினாலேயோ, என்னமோ, என்னாலே சின்னச் சின்ன விஷயங்கள்லே ஈடுபட முடியறதில்லே. அநியாயத்துக்கு ஒத்துக்கவோ, அநியாயக்காரனோடு கூட்டு சேரவோ முடியறதில்லே... இதையெல்லாம் புரிஞ்சுக்காம... புரிஞ்சுக்காம...''

மறுபடி குரல் தழுதழுக்க, அவள் தலையைத் தாழ்த்தி முகத்தை முழங்காலில் புதைத்துக் கொள்கிறாள்.

அவன் பேசாமல் அவள் முதுகை வருடிக் கொடுக்கிறான். மனம் அவள் சொன்னதையெல்லாம் நினைத்துப் பார்த்துக் கொள்கிறது...

இவளுக்குள் வேறொரு காதம்பரி இருப்பதாய் அன்று நினைத்தானே, எவ்வளவு நிஜம்! சற்றுப் பொறுத்து அவளே மெல்லத் தேறி, நிமிர்கிறாள்.

''நான் சொன்ன பின்னணியை வெச்சுப் பார்த்தீங்கன்னா, சில சமயம் ஏன் இப்படி முன்னுக்குப் பின் முரணா இருக்கேன்னு புரியும். இன்னொரு பரீட்சையான்னு மனம் துணிய மாட்டேங்கிறது. ஏன்னா, பட்டு பட்டு மனசு ரொம்ப நொந்து போன மாதிரியிருக்கு. இன்னும் ஓர் அடி, சின்ன தட்டு கூட தாங்க மாட்டேனோன்னு எனக்கே சந்தேகமாயிருக்கு...''

அவன் புன்னகைக்கிறான். ''நம்பிக்கையிழந்து விடவே கூடாது காதம்பரி. நான் சொல்ல வேண்டியதில்லே அதை. இந்தச் சமயத்திலே நீ உடையாம இருக்கிறதுதான் முக்கியம்... கண்ணைத் துடைச்சுக்கோ...''

மனத்தை அலம்பிவிட்ட மாதிரி இருக்கிறது. அழுக்கெல்லாம் அடித்துக் கொண்டு போய் சுத்தமான மாதிரி இருக்கிறது. சாதாரணமாய் அலம்பித் துடைத்த இடத்தில் கோலம் போடுவார்கள்.

அவள்...?

இன்னொரு கோலமா...?

போட்டுப் பார்க்கலாமா...?

மையப் புள்ளியாய் இதோ, இவனை வைத்து... அதென்ன சிரிப்பு...!

மின்னலடித்தாற் போல் அதென்ன உற்சாகம்...!

அந்தச் சிரிப்பில், அந்த உற்சாகத்தில் சங்கமிப்பதா கஷ்டம்...?

அவள் சங்கமித்தால்...?

புறங்கையால் கண்களைத் துடைத்துக் கொண்டு அவனைப் பார்க்கிறாள்.

அவன் மோகனமாய்ச் சிரிக்க —

அவர்களின் பார்வைகள் கலக்கின்றன.

(தொடரும்)

# அவரவர்கள் பார்வையில்...

பெண் என்பவள்தான் திருமணத்திற்குப் பிறகு ஆதிபராசக்தியைப் போல் எத்தனை அவதாரங்கள் எடுக்கிறாள்! மனைவியாய், மருமகளாய், ஓரகத்தியாய், அண்ணியாய் இப்படி எத்தனை 'வடிவங்கள் அவளுக்கு? கணவர், மாமியார், மாமனார், மைத்துனர், நாத்தனார், ஓரகத்தி, மகள் என்று எத்தனைப் புதிய உறவுகள் இவளைச் சுற்றிப் பின்னிப் பிணைக்கின்றன? இவை அன்பால் நெய்யப்பட்ட பாச வலையா? அல்லது சிலந்தி பின்னிய மோச வலையா?

பங்கு பெறுவோர்:

சுந்தரி ராமச்சந்திரன், மாலதி சந்திரசேகரன், சரஸ்வதி சுவாமிநாதன், டாக்டர் ஹைமாவதி; பிரகதாம்பாள், அன்னபூரணி பத்மநாபன், கமலா தங்கப்பன், செல்வி சீதாலக்ஷ்மி, வெங்கடேசன், ரவி, சேகர்.

இங்கு ஒவ்வொருவரும் ஒவ்வொரு உறவுக்குப் பிரதிநிதியாகப் பேசுகிறார்கள்.

பெண்ணின் முதல் உறவான கணவனிடமிருந்தே உரையாடல் தொடங்குகிறது.

ரவி: ஒரு பெண்ணிற்குக் கணவராக அமைவதுஓர் அற்புதமான உறவு. பல ஆண்டுகளாக வளர்ந்த விட்டையும், உறவினர்களையும் ஒரு கணத்தில் உதறிவிட்டு முன்பின் அறிமுகமில்லாத ஒருவனிடம் ஒரு பெண் தன்னை ஒப்படைக்கிறாள் என்றால், அவள் தன் கணவன் மீது எப்படிப்பட்ட நம்பிக்கையை வைத்திருக்க வேண்டும்? இதை ஒவ்வொரு கணவனும் உணர்ந்து விட்டால் மனைவியை நிச்சயமாக நன்றாக நடத்துவான். மனைவியைக் கண் கலங்காமல் பார்த்துக் கொள்வது கணவனின் கடமை.

சுந்தரி: அப்படியானால் தாய் இரண்டாம் பட்சம் என்று கருதி விடலாமா? மனைவியை சந்தோஷப்படுத்த நினைத்துத் தாயின் மனவேதனைக்கு எத்தனை பிள்ளைகள் காரணமாகிறார்கள்?





ரவி: தாய் என்ற நோக்கில் நீங்கள் சொல்கிறீர்கள். மாமியார் — மருமகளைப் புரிந்து கொண்டு அனுசரித்து நடந்தால் எங்களுக்குப் பிரச்னை இல்லை. ஆனால் சில சமயம் இருவரிடையே கருத்து வேறுபாடு ஏற்பட்டு சண்டை ஏற்பட்டால் இருபுறமும் இடிபடுபவன் கணவன்தான். மனைவி கணவன் தனக்கு சப்போர்ட் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்க, பிள்ளைப் பாசத்தால், மகன் தன் பக்கமே பேச வேண்டும் என்று தாய் எதிர்பார்க்க, கணவன் நிலை தர்மசங்கடம் தான். இத்தகைய சூழ்நிலையில் கணவன் உடனே சண்டையில் குறுக்கிடக் கூடாது. முடிந்தால் வீட்டை விட்டு அந்தச் சமயம் வெளியே சென்று விடுவதே நல்லது. ஓரளவு சூடு தணிந்தபின் அவரவர் நியாய, அநியாயங்களை எடுத்துக் கூறிச் சமாதானம் செய்ய வேண்டும். மொத்தத்தில் சண்டை வரும் நேரங்களில் கணவன் நிலை கத்தி மேல் நடக்கும் வித்தைக்காரன் நிலைதான்.

சரஸ்வதி: எல்லா வீடுகளிலும் இப்படிச் சண்டை வருவதில்லை. தற்காலத்தில் மாமியார் — மருமகள் இருவருமே ஓரளவு கல்வி அறிவும் உலக அனுபவமும் பெற்றவர்களாக இருப்பதால் பெரும்பாலும் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு அனுசரித்துப் போய் விடுகிறார்கள். வாய்ச்சண்டை போடுவது அநாகரிகம் என்ற உணர்வு இப்போது ஏற்பட்டு விட்டது. யாராவது ஒருவர் விட்டுக் கொடுத்துச் சமாதானம் செய்து கொண்டு விடுகிறார்கள். உதாரணமாக எனக்கு நான்கு பிள்ளைகள். என் நான்கு மருமகள்களையும் நான் தேவையான போது கண்டித்து, பாராட்டி, அறிவுரை கூறி நடத்துகிறேன். நான் சொல்வது அவர்கள் நன்மைக்குத் தான் என்பதை அவர்கள் உணர்ந்து விட்டதால் என்னிடம் அன்புடனும் மரியாதையுடனும் பழகுகிறார்கள்.

பிரகதா: மருமகளை மிகவும் அடக்கி ஆள நினைப்பதே மாமியார் — மருமகள் சண்டைக்குக் காரணம். மருமகள் வேலைக்குப் போவதால் மாமியார், வீட்டு வேலைகள் அனைத்தையும் தானே செய்ய வேண்டியிருக்கிறது என்று ஏன் அலுத்துக் கொள்ள வேண்டும்? மருமகள் உழைப்பில் வரும் வருமானத்தில் தன் பிள்ளை, பேரக் குழந்தைகள் வசதியாக வாழ முடிவதை எண்ணி மகிழலாமே?

மாலதி: புதிதாக வந்த மருமகளுக்குப் புதிய மனிதர்கள். புதிய சூழ்நிலை, புதிய பழக்க வழக்கங்கள் இவை ஏற்படுத்தும் மிரட்சியோடு, பிறந்த வீட்டு மனிதர்களைப் பிரிந்து வந்த ஏக்கம் வேறு இருக்கும். இந்நிலையில் புகுந்த வீட்டு மனிதர்கள், குறிப்பாக மாமியாரின் குற்றம் கூறுதல், கேலி செய்தல், கடுஞ்சொல் பயன்படுத்துதல் இவற்றால் அவள் மனம் மிகவும் பாதிக்கப்படும். திருமணமான புதிதில் அன்போடும், ஆதரவோடும் நடத்தப்படும் மருமகள் வாழ்நாள் முழுவதும் அவர்கள் மீது அன்பு செலுத்துகிறாள். முதல் கோணல் முற்றும் கோணல் என்பது போல் இந்த ஆரம்ப கால இல்வாழ்க்கை அனுபவமே பல குடும்பங்களில் மாமியார்—மருமகள் கருத்து வேறுபாட்டுக்கு அடிகோலுகிறது.

சுந்தரி: சில சமயம் மகன், மருமகளின் சொந்த விவகாரங்களில் மாமியார் குறுக்கிடுவதால் கூட பிரச்னைகள் ஏற்படுவதுண்டு.

பிரகதா: நான் என் மருமகளின் விருப்பத்திற்குக் குறுக்கே நிற்பதில்லை. இந்த நாகரிக யுகத்தில் சில அத்தியாவசியமான பொருட்களை வாங்க வேண்டி இருக்கிறது. டீ. வி. யும், ஃப்ரிட்ஜும் ஆடம்பரப் பொருள்கள் என்று கருதிய காலம் மலையேறிவிட்டது. அதேபோலக் குழந்தைகளின் படிப்புக்காக நல்ல பள்ளி, கல்லூரி இவற்றில் அதிக பணம் செலவழித்துச் சேர்க்க வேண்டியதும் தவிர்க்க முடியாத ஒன்று. இவற்றையெல்லாம் நான் அநாவசியம் என்று விமரிசிப்பதில்லை. வேலைக்குப் போகும் மருமகள் விடுமுறை நாட்களில் கணவர், குழந்தைகளுடன் ஜாலியாக வெளியே போவது கூடத் தவறில்லை. இதையெல்லாம் மாமியார்தான் புரிந்து கொண்டு நடக்க வேண்டும்.

கமலா: இதில் அதிகம் பாதிக்கப் படாதவர் மாமனார்தான் என நினைக்கிறேன்.

சேகர்: இதற்கு முக்கிய காரணம் நம் குடும்பங்களில் மரியாதை காரணமாக மாமனாருடன் மருமகள் அதிகம் பேசுவதில்லை. இரண்டாவது மாமனாருக்கு வேளைக்குச் சாப்பாடும், காப்பியும் வீட்டிலுள்ள எந்தப் பெண்மணியும் அளித்து விடுவாள். இதற்கு மேல் அதிக அளவு அவர் உள் விவகாரங்களில் தலையிட வாய்ப்பில்லை. இதனாலேயே







மாமனாருக்கு எப்பொழுதும் மருமகளிடம் நல்ல பெயர்.

வெங்கடேசன்: அப்படிச் சொல்வதற்கில்லை. பல குடும்பங்களில் மாமனார் — மருமகள் சண்டை கூட நடப்பதுண்டு.. ஆனால் என் வீட்டில் நான் என் மருமகளை என் மகளைப் போலவே கருதி நடத்தி வருகிறேன். குடும்ப விஷயங்களை மகன் மட்டுமல்லாது மருமகளும் என் மூலமே அறிய வேண்டுமென விரும்புகிறேன்.

சுந்தரி: சில குடும்பங்களில் மாமனார், மாமியார் பொருளாதார ரீதியிலும், உடல் நலத்திலும் மகன் மருமகளைச் சார்ந்து இருப்பதில்லை. அத்தகைய ' குடும்பங்களில் அவர்கள் மகனும் மருமகளும் தங்கள் இஷ்டத்திற்குக் கட்டுப்பட்டுத்தான் நடக்க வேண்டுமென்று விரும்புகிறார்களே?

வெங்கடேசன்: இப்படிப்பட்ட பெற்றோர்கள் திருமணமான பிள்ளை மருமகளைத் தனியாக வைத்து விடுகிறார்கள். இதனால் மருமகளும், பேரக் குழந்தைகளும் குடும்பப் பெரியவர்களிடம் பழகும் வாய்ப்பு குறைகிறது. பெரியவர்கள் தங்கள் வாழ்க்கை, மூலமே பல நல்ல விஷயங்களை இளையவர்களுக்குக் கற்பிக்கலாம். இப்படிப் பிரிந்திருப்பதால் எதிர்காலத்தில் குடும்ப உறவுகள் மிகக் குறுகிய வட்டத்திற்குள் அடைபட்டு விடுகிறது.

சரஸ்வதி: சில வீடுகளில் மாமனார், மாமியார் நல்லவர்களாக இருந்தாலும் நாத்தனார்களால் பிரச்னைகள் முளைக்கின்றனவே?

கமலா: நாத்தனார் என்றால் கொடுமை செய்பவர்கள் என்னும் எண்ணம் வேரோடிப் போய் விட்டது. பாருங்களேன், எல்லோருக்கும் அழகான பெயர்கள் இருக்க இவர்களுக்கு மட்டும் 'நாத்த'னார் என்னும் பட்டம்?

(சிரிப்பு)

சுந்தரி: அந்தக் காலத்தில் தந்தையின் சொத்து ஆண் பிள்ளைகளுக்கு மட்டுமே என்று இருந்தது. இதனால் நாத்தனார்கள் தன் தாய் தந்தையின் சொத்துக்குப் போட்டியாக வந்துவிட்டாளே என்று மருமகள் மீது பொறாமைப்பட்டுக் கொடுமையாக நடந்து கொண்டிருக்கலாம். இப்போது நிலைமை தலைகீழ். எல்லாக் குழந்தைகளுக்கும் சொத்தில் சமபங்கு இருக்கிறது. அதனால் நாத்தனார்— அண்ணி உறவில் இந்தக் காரணத்துக்காகச் சண்டை வரத் தேவையில்லை.

மாலதி: ஆனால் சில வீடுகளில் இப்போது கூட தாயின் நகைகளை மகளுக்கே கொடுக்கும் வழக்கம் இருப்பதால் தன் பங்கு சொத்து குறைந்துவிட்டதாக எண்ணி மருமகள் நாத்தனாரிடம் பகையைப் பாராட்டுகிறார்கள்.

அன்னபூரணி: பணம் மட்டுமே நாத்தனாரின் பொறாமைக்குக் காரணமில்லை. தன் அண்ணி வரும் வரை 'இளைய ராணி' போல வீட்டில் உலாவியவளுக்கு அண்ணி ஒரு போட்டியாகப் படுகிறாள். அண்ணனின் அன்பு பிரிகிறது. ஒரு புதிய பெண் தன் உரிமைகளுக்குப் பங்கு வந்துவிட்டாள் என்ற எரிச்சல். 'நாத்தனார்க் காய்ச்சல், பகையாளிக் காய்ச்சல், பங்காளிக் காய்ச்சல்' என்பார்கள். பெரும்பாலான குடும்பங்களில் மருமகள் கஷ்டப்பட நாத்தனாரே காரணமாகிறாள்.

கமலா: ஆனால் நான் கொடுமைக்கார நாத்தனார் இல்லை. சிறு பிரச்னைகளில் நாத்தனார் தலையிட்டுப் பெரிதாக்குவதால் மொத்த குடும்பத்தின் அமைதியுமே பாதிக்கப்படும் இதே போல் அண்ணி வந்தபின் அண்ணன் மாறிவிட்டான் என்று கூறுவதும் தவறு. என் தம்பி திருமணத்திற்குப் பிறகு வேறுவிதமாக நடந்து கொண்டால் கூட நான் அதற்காக அவன் மனைவி மீது குற்றம் சொல்ல மாட்டேன். என் தாயார் என்னிடம் அப்படிக் கூறினாலும் தவறு உன் பிள்ளை மீதுதான் என்றுதான் அறிவுரை கூறுவேன். என் புகுந்த வீட்டில் எனக்கு நல்ல மதிப்பும், அன்பும் கிடைப்பதால் என் சகோதரன் மனைவியையும் அவ்வாறே என் பிறந்த வீட்டில் நடத்த வேண்டும் என்று விரும்புகிறேன்.

ஆனால் தன் புகுந்த வீட்டில் கஷ்டப்படும் நாத்தனார்கள் இங்கு வந்து அம்மாவுக்குத் தூபம் போட்டு அண்ணியைக் கொடுமைப் படுத்துவார்கள். ஆயிரத்தில் ஒருவர்தான் தனக்குத்தான் நல்ல வாழ்க்கை அமையவில்லை, தன் தம்பி மனைவியாவது மகிழ்ச்சியோடு வாழட்டும் என்று நினைக்கிறாள்.

வெங்கடேசன்: நாத்தனாரை விடுங்கள். சில வீடுகளில் தன் எல்லாப் பிள்ளைகளையுமே ஒரே மாதிரி நடத்துவதில்லை பெற்றோர்கள். இப்படி ஏற்றத் தாழ்வுகள், பாரபட்சம் நிலவும் வீட்டில் மருமகள் — மைத்துனர் உறவு எப்படி சகஜமாக அமைய முடியும்?

சேகர்: பெற்றோர்கள்தான் பாரபட்சமாக நடக்க வேண்டுமென்பது இல்லை. கல்வித் தகுதி, உத்தியோகம், சம்பளம் இவற்

**மாமியார் பிரச்னை என்றாலும், நாத்தனார் பிரச்னை என்றாலும் அளவுக்கு மீறிப் பெரிது பண்ணாதீர்கள். அதே மாதிரி மாமனார், நாத்தனார் கொடுமையின் மொத்த உருவம் என்று முத்திரை குத்திக் கொண்டு பழக ஆரம்பித்தால் உங்களால் இயல்பாக இருக்க முடியாது. அதே மாதிரி பிறந்தகத்தில்; புகுந்த வீட்டைப் பற்றிய குறைகளைச் சொல்வதைத் தவிர்க்க வேண்டும். உங்களுக்கு வடிகால் தேவை என்றால் ஒரு வெள்ளைத் தாளில் நீங்கள் நினைப்பதை எழுதி கிழித்துப் போடுங்கள். இது நல்ல பலன் தரும்.**



மீண்டும் மீண்டும்
சுவைக்கத் தூண்டும்
நியூட்ரின்
மில்க் பிஸ்கட்ஸ்







ACIL/0009/86-Tam

ளால் கூட சகோதரர்கள் வித்தியாசப்படலாம். ஆனால் இவற்றையெல்லாம் மீறிய நிலையில் அவர்களின் அன்பு நிலைக்க பெற்றோர்களின் அன்புதான் அவசியம்.

மாலதி: அதேபோல மைத்துனன் தன்னிடம் தாயைப் போலப் பழகினால் அண்ணியின் மனம் அன்பால் நெகிழ்ந்து போகும். இதனால் வரும் ஓரகத்தியின் மீது இப்போதே பாசம் பொழியத் தொடங்கி விடுவாள். திருமணமான பின் இரு ஓரகத்திகளும் நிச்சயம் ஒற்றுமையாக இருப்பார்கள். இதற்கு அஸ்திவாரம் அமைக்கும் கடமை மைத்துனரைச் சார்ந்தது.

சேகர்: சில சமயம் தன் குழந்தைகள், மைத்துனர் குழந்தைகளைப் போல நன்றாகப் படிக்கவில்லை, வேலை செய்யவில்லை என்றும் மனத்தாங்கல் கூட ஏற்படும். ஆனால் அண்ணி என்பவர் ஐந்து விரல்களும் ஒரே மாதிரி இருப்பதில்லை என்பதை உணர்ந்து மைத்துனரைத் தன் கணவருடனும், அவர் குழந்தைகளைத் தன் குழந்தைகளுடனும் ஒப்பிடுவதை விட்டுவிட்டால் உறவு நிலைக்கும். வெறுப்பு மறையும்.

சுந்தரி: சில சமயங்களில் ஓரகத்திகளின் திறமைகள், திருமணத்தின் போது செய்யப்பட்ட சீர், ஏன் மாமியார் யாரை அதிகம் புகழ்கிறார் என்பது கூட ஓரகத்திகளிடையே சச்சரவை வளர்க்கும்.

ஹேமாவதி: ஒரு குடும்பத்தில் புதிதாக வந்த மருமகளை மாமியார் புகழ்வது இயல்பு. இதனால் மூத்த மருமகள் ஓரகத்தி மீது பொறாமைப்படக் கூடாது. எங்கள் வீட்டில் நான் மருத்துவத் தொழிலுக்காகத் தினமும் வெளியே போய்விடுவேன். என் ஓரகத்தி தான் வீட்டைக் கவனித்துக் கொள்வாள். நான் வெளி விவகாரங்களையும், அவளின் குழந்தைகளின் உடல் ஆரோக்கியத்தையும் கவனித்துக் கொள்வேன். இதனால் பல ஆண்டுகள் நாங்கள் எவ்வித பிரச்சினையும் இல்லாமல் ஒற்றுமையாக வாழ முடிந்தது.

சேகர்: பல குடும்பங்களில் மிக ஒற்றுமையாக இருந்த அண்ணன், தம்பிகள் ஓரகத்திகள் ஒத்துப் போகாததால் திருமணத்திற்குப் பிறகு பிரிந்து விடுவது மிகவும் வருந்தத் தக்க விஷயம். இதனால் குழந்தைகள் சித்தப்பா, பெரியப்பா என்னும் அற்புதமான உறவுகளை உணராமலேயே போய்விடுகின்றன.

பிரகதா: சில குடும்பங்களில் மருமகளே கூட குழந்தைகளைப் புகுந்த வீட்டு மனிதரிடம் அதிகம் ஒட்ட விடுவதில்லை. குழந்தை வளர்ப்பில் சரியான ஆலோசனை கூறுபவர் மாமியார். இவரின் அறிவுரைகளை அடிக்கடிக் கேட்பதன் மூலம் மருமகள் தன்னை மதிக்கிறாள் என்னும் உணர்வை மாமியார் பெறுகிறார். இதேபோலத் தாத்தாவிடம் குழந்தைகளைப் புராணக் கதைகள், அந்தக் கால அனுபவங்கள், ஸ்லோகங்கள், ஏன் பல பொது அறிவுச் செய்திகளைக் கூடக் கேட்டுத் தெரிந்து கொள்ளும்படி குழந்தைகளிடம் கூற வேண்டும்.

சுந்தரி: குழந்தைகள் என்றதும் எனக்கு ஒன்று சொல்லத் தோன்றுகிறது. குடும்ப உறவுகள் சுமுகமாக இருந்தாலும், சச்சரவுகள் இருந்தாலும் அதிக பாதிப்புக்கு உள்ளாவது மருமகளின் பெண் குழந்தைகளே. ஆண் குழந்தைகள் வெளியே விளையாடவோ, நண்பர்களுடன் பேசவோ போய்விடுவதால் அவர்கள் பாதிக்கப்படுவதில்லை.

சரஸ்வதி: நம்மிடம் இன்னொரு கெட்ட பழக்கம் உள்ளது. பெண் குழந்தைகளை எப்போதும் 'அத்தையைப் போலவே செய்கிறாய்' பாட்டியையே உரித்து வைத்திருக்கிறது' என்று திட்டுவதால் அப்பெண் குழந்தை உள்ளத்தில் இவர்கள் கெட்டவர்கள் என்னும் எண்ணத்தை உருவாக்குகிறோம். பாராட்டும் போது நாம் அத்தையையோ, பாட்டியையோ கொண்டிருப்பதாகக் கூறுவதில்லை. இது ஏன்?

சரஸ்வதி: தாய் மகளுக்கு வார்த்தையால் மட்டுமல்ல, தன் நடவடிக்கைகளால் கூட அறிவுரை வழங்கிய வண்ணம் இருக்கிறாள். சதா கணவருடன் சண்டை போடும் தாய் எதிர்காலத்தில் தன் மகள் ஒரு சண்டைக்கார மனைவியாக மாற வழி வகுக்கிறாள்.

ரவி: அதேபோலத் தனது தாய், தனது நாத்தனார், மாமியார், மைத்துனர், ஓரகத்தி இவர்களுடன் அன்பாகப் பழகுவதைக் காணும் பெண் தானும் தன் கணவன் வீட்டில் இப்படியே நடக்க வேண்டும் என்று எண்ணுகிறாள்.

கீதா: தாய் — மகள் உறவு என்பது வெறும் பாசப் பிணைப்பு மட்டுமல்ல. இந்த ஒரு உறவு சீராக அமைந்துவிட்டால் போதும். மற்ற எல்லா உறவுகளும் நேராகிவிடும். தன் தாயை முன் உதாரணமாகக் கொண்டு வளரும் பெண்கள் எதிர்காலத்தில் நிச்சயமாக சிறந்த இல்லத் தலைவிகளாக விளங்குவார்கள்.

கலந்துரையாடல் அமைப்பு:
**லட்சுமி சங்கர்**

புகைப்படங்கள்:
**தாம்பரம் கோபி ஸ்டுடியோ**

**இந்த இதழில் குடும்ப உறவுகளைப் பற்றிய துணுக்குகளை எழுதியவர்:**
**திருமதி பூங்கோதை குருதாஸ்.**







# மாமியார்; தாய்; மருமகள்!

கலியாணம் ஒரு பெண்ணின் வாழ்க்கையின் உன்னதமான தருணம். கெட்டி மேளம் கொட்டித் தங்கத் தாலி கட்டிக் கொண்டு உற்றாரும் உறவினரும் ஆசீர்வதிக்க அமர்க்களமாக வாழ்க்கையை ஆரம்பிக்கிறாள். அப்பா அலைந்து திரிந்ததும் அம்மா கவலைப்பட்டு உருகியதும் பெண்ணுக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமையத்தானே!

அமைத்துக் கொடுத்த வாழ்க்கையை ஆனந்தமாக்கிக் கொள்வது யார் கையில் இருக்கிறது?

இருபது வருடம் ஓர் இடத்தில் வளர்ந்து பழகிய பெண்ணுக்குப் புது இடம் புது உறவு என்று வரும்போது இயல்பான பயங்களும், வருத்தங்களும் இருக்கத்தான் செய்யும். அதை அவள் எப்படிக் கடந்து வருகிறாள் என்பதைப் பொறுத்துத்தான் அவள் வாழ்க்கையே அமையும்.

பழைய காலத்தில் ஏழு வயதில் கல்யாணம் செய்து கொடுத்தபோது, விவரம் தெரிய ஆரம்பித்ததே மாமியார் வீட்டில் தான் என்பதால் அதிகம் பிரச்னைகள் இல்லை. பின்னால், பதினேழு வயதில் மணம் செய்து கொடுத்த காலத்திலும், புக்ககம் போகும் பெண்ணிடம் அம்மா சொல்வாள். ''பொறுமையே பூஷணம். கணவனே தெய்வம். வாயைத் திறக்.ாமல் நல்ல பெயர் எடு'' என்று.

ஆனால் நிறையப் படித்து, குடும்பத்திற்காக ஓடி உழைத்து, சமயத்தில் குடும்பத்தையே நிர்வகித்து முதிர் கன்னிகளாக இருபத்தேழு வயதில் கலியாணம் செய்து கொள்ளும் இந்தக் காலத்தில் என்ன அறிவுரை சொல்வது? திருமணம்பற்றி மூன்று கோணங்களில் பேசுகிறார்கள் ஒரு மாமியார், ஓர் அம்மா, ஒரு புதிய மருமகள்.

**திருமதி ராஜலட்சுமி (மூன்று மருமகள்களின் மாமியார்):**

'கலியாணமாகும் போது எனக்கு ரொம்பச் சின்ன வயது. கூட்டுக் குடும்பத்தில் இல்லையென்றாலும் ஆரம்பத்தில் வித்தியாசங்கள் தெரியத்தான் செய்தன. எல்லோரையும் விட்டு எங்கோ காட்டிற்கு வந்தாற் போல் இருக்கும்.

பக்கத்து ஊரில்தான் அம்மா வீடு என்றாலும் நினைத்தாற்போல் போக முடியாது. அவர்களும் அடிக்கடி வர மாட்டார்கள். வந்தாலும் எல்லோருக்கும் பொதுவாகக் கூடத்தில் உட்கார்ந்து பேசிவிட்டுப் போவார்கள். ''என்னம்மா சௌக்கியமா?'' என்று கேட்டுவிட்டுச் செல்வார்கள். தப்பித் தவறி வாசல் வரை கூடப் போனாலும் ''தனியாக என்ன பேச்சு'' என்று கண்டிப்பார்கள்.

கல்யாணமாகி வந்தால் இப்படித்தான் இருக்க வேண்டும் என்பது எழுதாத சட்டம்

தான். எப்படி இருந்தாலும் கணவன் வீடு தான் எல்லாம் என்று இருக்க ஆரம்பித்தது தானே எல்லாம் பழகிவிட்டது.

எனக்கு நாலும் பிள்ளைகள். மூன்று நாட்டுப் பெண்கள். இரண்டு பேர் வேலைக்குச் செல்கிறார்கள். படித்தவர்கள், விவரம் தெரிந்தவர்கள். அவர்கள் என்னைப் போல இந்த வித்தியாசங்களால் அதிகம் சங்கடப்பட்டதாக எனக்குத் தோன்றவில்லை.

தவிரவும் இவர்கள் காலத்தில் கட்டுப்பாடுகளும் கிடையாது. வேண்டிய போது அம்மா வீட்டிற்குப் போகலாம், வரலாம். அதனால் இந்தச் சலனம் அவர்களுக்கு வர வாய்ப்பில்லை என்றே நினைக்கிறேன்.

கல்யாணமாகிப் போகும் பெண்களுக்கு நான் சொல்வது இதுதான்: 'என்ன நடந்தாலும் நான்கு சுவரைத் தாண்டி வெளியில் போகக் கூடாது. கணவன்தான் கடவுள். கணவன் வீட்டார் எல்லாம் நம் உறவினர் என்ற எண்ணம் வந்தால் ஒட்டுதல் தானே ஏற்படும்.''

**திருமதி லட்சுமி அம்மாள் (இரண்டு பெண்களுக்கு, இரண்டு பேத்திகளுக்குத் திருமணம் செய்தவர்):**

கல்யாணம் பண்ணி அனுப்பும் போது எனக்கு ஒன்பது வயது. என் அம்மா சொன்னது இதுதான்: 'நல்ல பெயரோடு வந்தால் தான் திரும்பி இங்கே வரணும். உன்னைப் பற்றி ஒரு வார்த்தை புகார் வந்தாலும் திரும்பியே பார்க்க மாட்டேன்' என்று. அம்மா கோபிப்பாளே என்று சமர்த்தாக இருக்க ஆரம்பித்துப் பின்னால் அப்படியே பழகி விட்டது.

பெரிய குடும்பம். வருவோர் போவோர் அதிகம். வாயைத் திறக்காமல் வேலை செய்வேன். எந்தக் குறையையும் அம்மாவிடம் சொல்ல மாட்டேன்.

என் பெண்களைக் கல்யாணம் செய்து அனுப்பும்போதும் நல்ல பெயர் வாங்க வேண்டும் என்றுதான் திருப்பித் திருப்பிச் சொல்லி அனுப்பினேன். புக்ககத்தில் இருக்கும் சில குறைகளை அவர்கள் வந்து சொல்லும் போது அதிகம் பொருட்படுத்த மாட்டேன். பொறுமையாக இரு. சரியாகிவிடும் என்றுதான் சொல்வேன். இப்போது எல்லோரும் ஜாம் ஜாம் என்று இருக்கிறார்கள். பேத்திகளும் நல்ல பெயர் எடுத்து விட்டார்கள்.

பெண்ணைக் கல்யாணம் செய்து கொடுத்த பின் தாயார் கூடுமானவரையில் அந்தக் குடும்பத்து விஷயங்களில் தலையிடக் கூடாது. அவர்கள் வந்து குறை சொன்னாலும் ''உன் குடும்பத்து விஷயங்களை வெளியில் சொல்வது தப்பும்மா.'' என்றுதான் புத்தி சொல்ல வேண்டும்.

தாயார் இருப்பதைப் பார்த்தே பெண் நிறையத் தெரிந்து கொள்கிறாள். பிரச்னையை ஊதிப் பெரிதுபடுத்தாமல் பொறுமையாக இருந்தால் எந்தப் பெண்ணுக்கும் வெற்றி நிச்சயம்.

**திருமதி செல்லம்மாள் வரதராஜன் (திருமணமாகி நான்கு மாதங்கள் ஆனவர்):**

''தாயார்வீட்டிலிருந்துமாமியார்வீட்டிற்கு வந்த பிறகு சின்னச் சின்ன விஷயங்கள் கூட ரொம்ப வித்தியாசமாய்த் தெரியும். அங்கே நினைத்தபோது படிக்கலாம். பாட்டு கேட்கலாம், பேசலாம். சும்மாவும் இருக்கலாம். ஆனால் இங்கோ — நாலு பேர் வேலை செய்யும் போது உட்கார்ந்து படிக்க முடியாது. எல்லோரும் டீ. வி. பார்த்துக் கொண்டிருக்கும் போது கண்ணை மூடிக் கொண்டு எதையோ யோசித்துக் கொண்டிருக்க முடியாது.

அம்மா பலமாகக் கண்டித்திருக்கக் கூடிய சாதாரண விஷயங்களை மாமியார் சாதாரணமாகச் சொன்னால் கூட துக்கம் வரும் ஒரே விஷயத்தை மாமியார், நாத்தனார், மாமனார் ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு கண்ணோட்டத்தில் பார்க்கக் கூடும். நாலு மருமகள்களுக்கு நடுவில் கடைசி மருமகளாக வந்து விட்டால் காலேஜ் மாதிரி, ஸீனியர் ஜூனியர் வித்தியாசம் வேறு இருக்கும்.

கல்யாணம் ஆகி வந்தவுடன் இருக்கக் கூடிய இந்த வித்தியாசங்கள், எந்தக் காலத்திலும் எந்தப் பெண்ணுக்கும் உண்டு. அதை அவள் எப்படிச் சமாளிக்கிறாள் என்பதில் தான் அவள் வாழ்வே இருக்கிறது.

மாமியார் மாட்டுப் பெண்ணை 100% பெண்ணாகப் பாவிப்பது எங்கும் இல்லை. இருக்கவும் முடியாது என்பதுதான் என் அபிப்பிராயம். என் அம்மாவே — நான் சாதாரணக் கால்வலி என்று லெட்டர் எழுதினால் பதைக்கிற அளவுக்கு என் மன்னி படுக்கையில் படுத்துக் கொண்டிருந்தால்

கணவன் — மனைவி இரண்டு பேரும் படுக்கும் முன்னர் குறைந்தது அரை மணி நேரமாவது பேசிக் கொள்ள வேண்டும். அலுவலகப் பிரச்னை, வீட்டுப் பிரச்னை, குழந்தைகள் பிரச்னை, சொத்து வாங்கும் பிரச்னை இப்படி எத்தனை இல்லை? அதே மாதிரி ஒளிவு மறைவுமின்றி மனந்திறந்தே பேச வேண்டும். வேலைக்குப் போகிற அவசரத்தில் எங்காவது போக வேண்டியிருக்கும். அதைச் சொல்ல மறந்திருப்போம். யாராவது பண உதவி கேட்டிருக்கலாம். 'செய்துவிட்டு அப்புறம் சொல்லலாம்' என்று இருப்போம். பின்னால் அதுவே பெரிய பிரச்னையாக மாறி விடும்.

தேவைகளுக்கு கூட்டுறவு பண்டகசாலைகளை அணுகுங்கள்

கூட பதைப்பாளா என்பது சந்தேகம். மன்னி தன் ஆதரவுக்காக அவள் அம்மாவுக்கு எழுதக் கூடும்.

மாமியார் வீட்டில் ஒரு பெண் இயல்பாக இருப்பதில் கணவனின் பங்கும் அதிகம். கல்யாணத்தின் மூலம் அவள் நேரடியாகத் தொடர்பு கொள்வது அவனோடுதான். அவன் நெருங்கியிருக்கும் போது மற்றவர்களுடன் இருக்கும் ஐந்து அங்குல வித்தியாசம் அவன் விலகிப் போனால் ஐந்து அடியாக மாறி விடுகிறது. என் கணவனின் அம்மா, கணவனின் தங்கை என்றுதான் அவள் பாசத்தைப் படர விடுகிறாள். எதற்கும் நான் இருக்கிறேன் என்ற அன்பையும் நேசத்தையும் ஒரு கணவன் காட்டினால் பல பிரச்னைகள் தீர்ந்துவிடும்.

எவ்வளவு புத்திசாலியாக இருந்தாலும் வெளியில் என்னென்ன பெயர் வாங்கினாலும் தன் வீட்டிற்குள் எல்லோருக்கும் அடங்கித்தான் தன் மனைவி இருக்க வேண்டும் என்றுதான் ஒவ்வொரு கணவனும் நினைக்கிறான். சொன்னதைக் கேட்க வேண்டும் என்றுதான் ஒவ்வொரு மாமியாரும் நினைக்கிறாள்.

இந்த இடத்தில் ஒரு மருமகள் தன் புத்திசாலித்தனத்தைக் காண்பித்துத் தன் தனித்துவத்தை நிலைநாட்ட ஆரம்பித்தால் மிஞ்சுவது கசப்புத்தான். மனிதர்கள் அவளை விட்டு விலகிப் போவார்கள்.

கொஞ்சம் பொறுமையும் நிறைய விட்டுக் கொடுத்தலும் இருந்தால் போதும். புக்ககத்தில் நுழைந்தவுடன் ஒரு பெண் கண்ணையும் காதையும் திறந்து கொண்டு வாயை மூடிக் கொள்வதுதான் சிறந்தது என்பதுதான் என் அபிப்பிராயம்.

பேட்டி:

கிரிஜா ராகவன்

---



# முயன்றால் முடியாதது இல்லை!

பெற்றோர் சரியான முறையில் குழந்தைகளை ஊக்குவித்தால், எத்தகைய சிறப்பையும் அவர்கள் பெற முடியும் என்பதற்குக் குமாரி தீபா லட்சுமணன் குடும்பம் ஓர் உதாரணம்.

தீபா தன் அக்கா ஷோபா டேபிள் டென்னிஸ் ஆடுவதைப் பார்த்து ஆட ஆரம்பித்திருக்கிறாள். ஏகப்பட்ட தோல்விகள். அப்பா லட்சுமணன்,

'முயன்றால் முடியாதது எதுவுமே இல்லை.' என்பதை அவளுக்குத் தாரக மந்திரமாக ஓதியிருக்கிறார். தீபா வெற்றி பெற ஆரம்பித்தாள்! முதலில் அக்காவுடன் இணைந்து ஜூனியர் பெண்கள் இரட்டையர் பிரிவில் தேசிய சாம்பியனாக ஆனாள். இப்போது ஜூனியர் பெண்கள் பிரிவில் இந்தியாவில் முதல் இடத்தைப் பெற்று விட்டாள்.

தீபாவை சிறப்புப் பயிற்சிக்காக ஜப்பானுக்கு அனுப்பியது இந்திய அரசு. தமிழ்நாடு விளையாட்டு வளர்ச்சி நிறுவனம் 'இந்த வருட சிறந்த விளையாட்டுத் துறைப் பெண்மணி' விருதை இவருக்கு அளித்துள்ளது! இவ்விருதினை இதுவரை பெற்றவர்களிலேயே மிக இளையவர் பதினைந்து வயதான தீபாதான்.

தீபாவின் இத்தனைச் சிறப்பிற்கும் காரணம் தீபாவின் விடாமுயற்சியுடன், குடும்பம் முழுவதுமான ஒத்துழைப்பும்தான். இவருடைய தாயார் சுதா.

"இவர்களுக்கென்று தனிப் பயிற்சியாளரை நியமித்திருக்கிறோம். பள்ளியிலும் இவளை நன்கு ஊக்குவிக்கிறார்கள். சில சமயங்களில் நானும் வெளியூர்ப் பயணங்களுக்குப் போவேன்" என்கிறார்.

அட்டையில்: தீபா, சுதா

வண்ணப்படம்:, ஏ. எஸ். திவாகர்.

# சொல்லுங்கள் பார்க்கலாம்



1



2



3



6



7

1 அண்மையில் கராச்சியில் கடத்தல் காரர்களால் கடத்தப்பட்ட விமானத்தில் இருந்து பல வீர சாகசச் செயல்களைச் செய்தவர். பயணிகளைத் தப்புவிக்கும் பொருட்டுத் தன்னுயிரை ஈந்தவர். இவருக்கு அண்மையில் 'அசோக சக்ரா' வீரப்பதக்கம் அறிவிக்கப்பட்டுள்ளது.

2 பல மாடிக் கட்டிடங்களும், போக்குவரத்தும் சீராக இருப்பதற்காகப் பெரிய பெரிய சாலைகளை வரிசையாக கொண்டிருக்கும் இந்த நகரம் எது என்று தெரிகிறதா? அண்மையில் இங்கு விளையாட்டுப் போட்டிகள் பெரிய அளவில் நடந்தன

3 ஆலன் வாங்கர் ஒரு விஞ்ஞானி. இவருடைய கையில் ஒரு மண்டை ஓடு இருப்பதைக் காண்கிறீர்கள். அமெரிக்க விஞ்ஞானியான இவர் ஆப்பிரிக்காவில்தான் இந்த மண்டை ஓட்டைக் கண்டுபிடித்து இருக்கிறார். இந்த மண்டை ஓட்டின் விசேஷம் என்ன?

4 நடன வகைகளில் இது ஒன்று. இது எந்த நாட்டைச் சேர்ந்த நடனம்? இந்த நடனத்திற்கு என்ன பெயர்?

5 இந்த வருட டென்னிஸ் சாம்பியன் ஆன மார்ட்டின் நவரத்திலோவாவின் படம் இது. மார்ட்டின் மகிழ்ச்சியோடு இருப்பதற்கு என்ன காரணம்? நவரத்திலோவாவுடன் இருப்பவர்கள் யார்?

6 பூமிக்கு மேலே பூவாய் விரிந்து காட்சி தரும் இவை என்ன?

7 தமிழக அமைச்சர்கள் நாவலர் நெடுஞ்செழியனும், வீரப்பனும் யாரை வரவேற்கிறார்கள்?

8 சென்னையில் அண்மையில் நடைபெற்ற கிரிக்கெட் போட்டி இது. சரித்திர முக்கியத்துவம் பெற்ற இந்த கிரிக்கெட் போட்டியின் சிறப்பென்ன?



5



4



8



9

9 ரஷ்யாவில் ஆய்வின் மூலம் கண்டு பிடிக்கப்பட்டுள்ள புது வகை கோதுமை இது. இதன் விசேஷம் என்ன?

1 நீரஜா மிஸ்ரா.

2 ஆசிய விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்ற சியோல். தென் கொரியாவின் நகரம்.

3 ஆதி காலத்தில் மனிதன் எப்படி இருந்தான் என்பதை இந்த மண்டை ஓட்டை வைத்து ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். இந்த மண்டை ஓடு சுமார் 2.5 மில்லியன் வருஷத்துக்கு முந்தைய காலத்தைச் சேர்ந்ததாகும்.

4 ரஷ்ய நாட்டைச் சேர்ந்த பாலே நடனம்.

5 பதினொரு வருடத்திற்குப் பிறகு தனது சொந்த ஊரான போர்சுகீஸுக்கு வந்திருப்பதில் மகிழ்ச்சியோடு இருக்கிறார் நவரத்திலோவா. நவரத்திலோவாவின் தாயும் தந்தையும் உடன் இருக்கிறார்கள்.

6 பாராசூட். இந்திய ராணுவப் படையின் பாராசூட் வீரர்கள் சென்னை பரங்கி மலையில் அண்மையில் வீர சாகசச் செயல்களை நடத்திக் காட்டினார்கள்.

7 ஜாம்பியா பிரதம மந்திரி முஸோகோட்வானி (Musokotwane) தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்த போது அவரைத் தமிழக அமைச்சர்கள் வரவேற்கிறார்கள்.

8 இந்தியாவில் நடைபெற்ற முதல் 'டை' பந்தயம் இது. வெற்றி, தோல்வி, டிரா இவை மூன்றும் இல்லாமல் இரண்டு அணிகளும் சமமான ரன்களை எடுத்தால் அதற்கு கிரிக்கெட்டில் 'டை' என்கிறார்கள். 1960 ஆம் வருடம் டிசம்பர் மாதம் ஆஸ்திரேலியாவிற்கும், வெஸ்ட் இண்டீஸுக்கும் நடைபெற்ற போட்டியும் 'டை' ஆனது. கிரிக்கெட் வரலாற்றில் முதல் டை அதுதான். இப்போது சென்னையில் செப்டம்பர் மாதம் நடைபெற்ற போட்டியில் ஏற்பட்டுள்ள டை உலக வரலாற்றில் இரண்டாவது 'டை.'

9 ஓம்ஸ்க் விவசாயப் பண்ணையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள இந்த கோதுமை ரகம் அதிக மகசூல் தரக் கூடியது. இதனால் உணவு உற்பத்தி அதிகமாகப் பெருகும் என்று ரஷ்யா நினைக்கிறது. ஒரு ஹெக்டேருக்கு 3.5 டன் கோதுமை விளையக் கூடிய புது ரகம் இது.

தொகுப்பு:

**தாம்பிரவருணி**

விருந்தாளிகளின் திடீர் விஜயம்

ஞாயிறு விடுமுறை:
கடக்கட பகலுணவு, பின்னர் ஒரு
குட்டித் தூக்கம் என்று மகிழ்ந்திருந்த
வேளையிலே வந்ததே ஒரு
விருந்தினர் கூட்டம். அதே சமயம்

சமையல் காஸ்
தீர்ந்து போகிறது...



வீட்டுக்கு வந்த
மாமனார்-மாமியாரை மகிழ்விக்க

புதுமணமான நீங்கள்
அவர்களை மகிழ்வூட்டி வைப்பது
சிறிது கடினம்தான். அதுவும்
அவர்கள் உங்கள் வீட்டுக்கு
விருந்துண்ண வந்திருக்கும்போது.
அதே சமயம்

சமையல் காஸ்
தீர்ந்து போகிறது...



பிறந்த நாள் கொண்டாட்டம்!

உங்கள் அருமை மகனின்
பிறந்த நாள். அவன் அழைத்து
வந்ததோ ஒரு பெரும் பட்டாளம்.
நீங்களோ சமையலறையில்
சுவையான தின்பண்டங்கள்
தயாரிப்பதில் மும்முரமாக இருக்கிறீர்கள்
அதே சமயம்

சமையல் காஸ்
தீர்ந்து போகிறது...



## சங்கடமான நிலை!
## சமைக்கும்போது தொல்லை

# இரண்டாவது சிலிண்டர்

## இருப்பின் இவையாவும் இல்லை.

இப்போதே பதிவு செய்வீர்! எளிதில் கிடைக்கிறது
**இரண்டாவது சிலிண்டர்**
எல்லா இன்டேன் விநியோகஸ்தர்களிடமும்



**Indane** சமையல் காஸ்
இந்தியன் ஆயில் கார்ப்பரேஷன் லிட்
தென் மண்டலம்





# வீடே கல்யாண கூடமாக...

கூட்டு குடும்ப அமைப்புக்கள் மாறி வரும் நாளில் கூட்டுக் குடும்பமாக இருப்பதை ஒரு கொள்கையாக வைத்திருக்கிறார் திரு. கிரிதரலால். 4 சகோதரர்கள், அவர்களின் மனைவிகள், குழந்தைகள், வயதான விதவைத் தாய், விதவை சகோதரி இவர்கள் அனைவருமாக முப்பது பேர் ஒரே குடும்பம். இது தவிர இரண்டு நாய்கள், பத்து மாடுகள், எட்டு வேலையாட்கள், ராஜஸ்தானிலிருந்து வரும் விருந்தினர்கள், வெளிநாட்டு விருந்தினர்கள், உறவினர்கள் என்று ஒரு நாளுக்கு சிறிய கல்யாண விருந்து போலத் தயாராகி அமர்க்களப்படும் சமையல் அறையும், வீடு நிறைய ஓடிவரும் குழந்தைகளும் கலகலப்பாக இருந்தது.

"இந்த மாதிரி கூட்டுக் குடும்பத்தின் ரகசியம் என்ன?"

"முதலில் கடவுளின் ஆசீர்வாதம். இரண்டாவது எங்கள் சகோதரர்களின் எண்ணமும் அதே மாதிரிதான். வயதான தாயாரை வணங்கும் என்னை, என் சகோதரர்கள் ஒரு தந்தை ஸ்தானத்தில் வைத்து இருக்கிறார்கள். என்னை நமஸ்காரம் பண்ணி விட்டுத்தான் தங்கள் வேலைகளை ஆரம்பிப்பார்கள்.

ஒரு சின்ன உதாரணம் சொல்லுகிறேன். எங்கள் நிறுவனத்தில் வேலை பார்க்கும் பெண்ணின் தாயாருக்கு இரத்தம் தேவைப்பட்டது. நான் இரத்த தானம் செய்ததைப் பார்த்து என் சகோதரர்கள், அவர்களின் மனைவிமார்கள் எல்லோரும் உதவி செய்தார்கள்!"

இந்த அளவு ஒரே மாதிரியான எண்ணம் உடையவர்களின், வீட்டு விவகாரங்கள் எப்படி உள்ளன? கிரிதரலால் தற்பொழுது பொறுப்புக்கள் அனைத்தையும் கவனிக்கும் மனைவியிடம் பேச வைத்தார்.

"குடும்ப விவகாரங்களை எப்படிச் சமாளிக்கிறீர்கள்?" என்றேன்.,

''வீட்டில் சமையல் வேலைக்கு மட்டும் ஆளில்லை. பெண்கள் சமைப்பதுதான் எங்கள் அனைவருக்கும் பிடிக்கிறது. நான்கு பெண்கள் நாங்கள் ஷிப்ட் மாதிரி வைத்திருக்கிறோம். காலையில் இரண்டு பேர் சேர்ந்து சமைப்போம்; மாலையில் இரண்டு பேர் செய்வோம். சமையல் வேலை இல்லாதவர்கள் இரண்டு பேர் மற்ற வேலைகளைப் பார்ப்பார்கள். எங்களுக்குள் அட்ஜஸ்ட்மெண்ட். வேலைகளைப் பகிர்ந்து கொள்வதால் எங்களுக்குள் எந்தவிதமானப் பிரச்னையும் இல்லை.

கூட்டுக் குடும்பத்தில் வருகிற முதல் பிரச்னையே ஒருவரே வேலை செய்வதால்தான். வேலைகளைப் பகிர்ந்து கொண்டால் பிரச்னையே இல்லை. குடும்பத்தில் எந்தப் பிரச்னை வந்தாலும் பகிர்ந்து கொள்கிறார்கள். சின்னச் சின்ன விஷயங்களை விட்டுக் கொடுத்து, ஒற்றுமையாக இருந்தால் கூட்டுக் குடும்பம் வெற்றிகரமாக அமையும்.

கிரிதரலாலின் தாயார் ஒவ்வொரு குடும்பத்திற்குத் தேவையான பணத்தைக் கொடுத்து விடுவாராம். ''நாங்கள் முதலில் மற்றவர்களின் குழந்தைகளைக் கவனிக்கிறோம். கடைசியில் எங்கள் குழந்தைகளைக் கவனிப்போம். அதனால் பாதிப் பிரச்னை குறைகிறது.''

''உங்களுக்குள் சண்டையோ, மனவேற்றுமையோ வந்ததே கிடையாதா?''

''குழந்தைகள் சண்டை போடும். அதனால் சண்டை போட்ட குழந்தைகள் இரண்டு மூன்று நாட்கள் பேசாமல் இருக்கும். பெரியவர்கள் நாங்கள் அதை அப்படியே பெரிதுபண்ணாமல் விட்டு விடுவோம். கருத்து வேற்றுமை இருந்தாலும், கூட்டுக் குடும்பத்தின் நன்மைகளைக் கருதி விட்டு விடுவோம். பண்டிகை நாள், விசேட நாட்களில் குழந்தைகளுக்குக் கூட வேலைகளைப் பகிர்ந்து கொள்வோம்.''

என்கிறார்கள் மருமகள்கள்.

சிரித்தபடி வளைய வரும் மகன்கள், யாருக்காவது உடம்பு சரியில்லை என்றால் அதிகப்படியாகக் கவனிக்கும் மருமகள்கள், விதவையாகி வயதாகி விட்டாலும் அம்மாவிற்குத் தரும் மரியாதை, மதிப்புக் கொடுக்கும் குடும்ப அங்கத்தினர்கள், சின்ன விஷயங்களைப் பெரிதாக்காமல் கணவன்மார்கள் போற்றிப் பாதுகாத்து வரும் உணர்வுகளை மதித்து கூட்டுக்குடும்ப முறையினைக் காப்பாற்றும் இப்பெண்கள்...

வீட்டை விட்டு வெளியே வந்தபொழுது அந்த கலகலப்பான சூழ்நிலையில், ஒரே இடத்தில் குடும்ப அங்கத்தினர் அனைவரையும் சந்தித்த மகிழ்ச்சியில் ஏக்கம் தோன்றாமலில்லை. நம் குடும்ப அமைப்புக்கள் ஏன் மாறின?

— பூங்கோதை குருதாஸ்

வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்




சத்துமிகுந்த, சுவையான பிஸ்கட். பிரிட்டானியா







# படித்து விட்டு பட்சணம் செய்யுங்கள்!



* தீபாவளி லேகியம் செய்யும்போது பூராவும் நெய் விடுவதற்குப் பதில் கொஞ்சம் டால்டாவை விடுவோம். அவ்வாறு செய்வதைவிட டால்டாவுக்குப் பதில் அரை கரண்டி நல்லெண்ணெய் ஊற்றிக் கிளறலாம். லேகியத்தில் கொஞ்சம் இஞ்சிச் சாறைப் பிழிந்தெடுத்து ஊற்றிக் கிளறலாம்.

* லேகியத்துக்கான சாமான்கள் மிகவும் விலை அதிகமானதால் சில சாமான்களை மட்டுமே உபயோகித்து தீபாவளி லேகியம் செய்யலாம். சுக்கு, மிளகு, அரிசிதிப்பிலி, தனியா, இஞ்சி மஞ்சள், வெல்லம் இவைகளைக் கொண்டே லேகியம் செய்யலாம்.

* லட்டு செய்யும்போது அதற்கான முத்தைத் தயார் செய்யும்போது கடலை மாவுடன் சிறிதளவு அரிசி மாவையும் கலந்து கொள்ள வேண்டும்.

* ஜாங்கிரி செய்யும்போது உளுத்தம் பருப்பை அரைத்து முடித்தவுடன் மூன்று கப் விழுதுக்கு ஒரு டேபிள் ஸ்பூன் அரிசி மாவைக் கலக்க வேண்டும்.

* காரட் அல்வாவில் பால் ஊற்றிக் கிளறுவதற்குப் பதில் பால்கோவா போடலாம். ஏதாவது ஒரு எஸென்ஸை இறக்கும்போது அதில் விடலாம்.

* எந்த ஸ்வீட் செய்தாலும் சூடாகயிருக்கும் போது வில்லை போட்டால் சரியாக வராமல் தூளாகி விடும். ஆறிய பின்னரே வில்லை போட வேண்டும்.

* ஜிலேபி, ஜாங்கிரி ஜீரா கொஞ்சம் அதிகமாகிவிட்டால் அதில் கொஞ்சம் முறுக்கை நொறுக்கிப் போட்டு கிளறி வைக்கலாம். அல்லது அதில் மைசூர்பாகு பர்பி தூளைப் போட்டு அடுப்பில் வைத்து ஐந்து நிமிடம் கிளறி இறக்கிச் சாப்பிடலாம். புது வகை ஸ்வீட் மாதிரி இருக்கும்.

— என். ரம்யா

* தேங்காய் பர்பியில் தேங்காயுடன் வெறும் வாணலியில் வறுத்து ஊற வைத்த நிலக் கடலையையும் சேர்த்து அரைத்துப் போடலாம்.

* கோதுமையைத் தண்ணீரில் போட்டு பனிரெண்டு மணி நேரம் ஆன பிறகு அல்வா செய்தால் சுவையாயிருக்கும்.

* காரட் அல்வாவில் கால் பங்கு தக்காளிப் பழங்களைச் சேர்த்தால் சுவையாயிருக்கும்.

* வெறும் வாணலியில் கடலை மாவை சிறிது நேரம் வறுத்த பிறகு தேன்குழல் ஓமப் பொடி, முள்ளு முறுக்குக்கு மாவைப் பிசைந்தால் சுவையாயிருக்கும். வாணலியில் சிறிதளவு டால்டாவை, ஊற்றி (புகை வராமல்) சுட வைத்த பின் கடலை மாவு கலவையில் ஊற்றி தேன்குழலுக்கு மாவு பிசைந்தால் சுவையாயிருக்கும்.

* சோமாசிக்குள் வைக்கும் பூரணத்துடன் பர்பி மைசூர்பாகு தூளையும் இடித்துச் சேர்த்துக் கொண்டால் சுவை அதிகமாயிருக்கும்.

— ந. விசாலாட்சி

* சேமியா மற்றும் ஜவ்வரிசி பாயசம் செய்யும்போது, பால் இல்லையென்றால், கவலை வேண்டாம். ஒரு மூடித் தேங்காயைத் துருவி நைசாக அரைத்துப் போட்டுக் கலக்கி ஒரு கொதி வந்ததும் இறக்கினால் பாயசம் கமகமவென மணக்கும்.

* கோவா கிளறும்போது கட்டி கட்டியாகி விட்டால், உடனே அதை மிக்ஸியில் போட்டு அடித்தால் (1 செகண்ட்) சரியாகி விடும். பிறகு கிளறலாம்.

* உங்களுக்கு சமையலுக்கு தே. துருவல் தேவை. கையில் இருப்பதோ தேங்காய் பத்தை. என்ன செய்வது? ஓர் எளிய வழி: தே. பத்தையை பல்லு பல்லாக நறுக்கி மிக்ஸியில் போட்டு அடித்தால் ஒரே நொடியில் பூப்போல துருவல் (ஒரே அளவில்) கிடைக்கும்.

* முறுக்கு பிழியும்போது காயும் எண்ணெயுடன் சிறிது நெய் அல்லது டால்டாவையும் கலந்து வைத்து, அதில் முறுக்கு பிழிந்தால் முறுக்கு நெய்யில் செய்தது போன்ற மணத்துடனும், சுவையுடனும் இருக்கும்.

* முறுக்கு செய்யும்போது வழக்கமாக நாம் கலக்கும் மாவுடன் (அரிசி மாவு + உ. மாவு) சிறிது (புழுங்கல் அரிசியை வறுத்து) பொரி அரிசி மாவும் சேர்த்துப் பிசைந்து முறுக்கு செய்தால், முறுக்கு 'கரகர'வென சுவையுடன் இருக்கும்.

* மைதா கேக் செய்யும்போது, சிறிது பால் கோவாவையும் போட்டுக் கிளறினால் கேக் மணமாகவும், சுவையாகவும் இருக்கும்.

* பாதுஷா செய்யும்போது, முதலில் சர்க்கரை பாகை லேசான கம்பிப் பாகு வைத்து, அதில் பொரித்து வைத்துள்ள பாதுஷாவை போட்டுக் கிளறி எடுத்து, பின் வாழை இலையில் பாகில் இருந்து எடுத்த பாதுஷாவை வரிசையாக அடுக்கி, நல்ல கெட்டிப் பாகு வைத்து பிறகு அதை பாதுஷா மேல் ஊற்றி, வர பாதுஷா மீது பாகு நன்கு ஒட்டிக்







கொண்டு உறைந்து பார்க்க அழகாக இருக்கும்.

— ஆர். பாலசரஸ்வதி

### பாதாம் கேரட் பாயசம்

தேவையான பொருட்கள்:

நல்ல காரெட்..... 2
பாதாம் பருப்பு..... 40
காய்ச்சிய பால்..... 1 லிட்டர்
சர்க்கரை..... சுமார் ½ கப்
ஏலக்காய்...... 4
குங்குமப்பூ.... கொஞ்சம்

செய்முறை:

முதல் நாள் இரவு பாதாம் பருப்பைத் தண்ணீரில் ஊற வைக்கவும். காரெட்டை தோல் சீவி நன்றாகக் கழுவி துண்டாக்கிக் குக்கரில் வைக்கவும்.

வெந்த காரெட்டுடன் உரித்த பாதாம் பருப்பு, குங்குமப்பூ, ஏலக்காய் எல்லாம் சேர்த்து வெண்ணெயாக அரைக்கவும். விழுதை அரை லிட்டர் பாலில் கலக்கி அடுப்பில் வைத்து மெல்லிய தீயில் நன்கு குறுகியதும் சர்க்கரையைப் போடவும். இன்னும் சிறிது குறுகியதும் பாக்கி அரை லிட்டர் பாலைக் கொஞ்சம் கொஞ்சமாக சேர்த்துப் பொங்கின பின் அடுப்பை அணைத்து விடவும். இது உடம்புக்கு மிகவும் நல்லது.

— சாந்தா கைலாசம்






தீபாவளியைப் பற்றி அனைவரும் அறிந்திருந்தாலும் தீபாவளிக்கு மறுநாள் பற்றி பல சகோதரிகள் அறிந்திருக்க மாட்டார்கள். அன்றுதான் ஸ்ரீ லக்ஷ்மி குபேர பூஜை செய்வார்கள். வறுமை நீங்கி வளங்கொழிக்கவும், இருள்நீங்கி ஒளிவீசவும் திருமகளின் திருவருளால் செல்வங்கள் பெருகவும், பிணி, மூப்பு போகவுமே இந்தப் பூஜை.

பூஜையறையில் அல்லது சமையல் அறையில் ஓர் ஓரமாக, இரண்டு பக்கமும் வெள்ளை யானைகளோடு காசு கொட்ட செந்தாமரையில் பத்மாசனமிட்டு அமர்ந்திருக்கும் கஜலக்ஷ்மி படத்தைக் குங்குமம் இட்டு மாட்டவும். முடிந்தவர்கள் பூமாலை, புது ரவிக்கை சாற்றலாம். முடியாதவர்கள் ஒரு முழம் பூவை வைக்கலாம்.

எதிரிலே லக்ஷ்மி கடாக்ஷ கோலமோ, ஹ்ருதயகமல கோலமோ போடவும். நடுவில் துளி மஞ்சள்பொடி வைத்து, துளி குங்குமம் இடவும். பின்பு குத்து விளக்கை ஏற்றவும். ஒரு முகமே போதும். இரண்டு குத்து விளக்குகள் வைத்தால் மிகவும் நல்லது. லக்ஷ்மி படத்திற்கு எதிரிலே ஓர் வெள்ளி அல்லது பித்தளைத் தட்டில் (எவர்சில்வர் கூடாது) ஒன்பது ஒரு ரூபாய் நாணயங்களை வட்ட வடிவமாக எட்டும், நடுவில் ஒன்றுமாக வைக்கவும். அதன்மேல் ஒரு மஞ்சள், ஒரு தாலிச் சரடு, லக்ஷ்மி டாலர் இவற்றை வைக்கலாம்.

பின்னர், நாம் அமர்ந்து கொண்டு முதலில் "சுக்லாம்பரதரம்" சொல்லி, பிள்ளையாரை வணங்கிவிட்டு, லக்ஷ்மியைப் பூஜிக்கத் தொடங்கலாம். லக்ஷ்மி அஷ்டோத்திரம், சரஸ்வதி அஷ்டோத்திரம், துர்க்கை அஷ்டோத்திரம் என மூன்று தேவிகளின் அஷ்டோத்திரங்களையும் சொல்லி, குங்குமத்தால் அர்ச்சனை செய்யவும். குபேர அஷ்டோத்திரமும் செய்தால் மிகமிக நல்லது.

பின்பு தேங்காய் உடைத்து, வாழைப் பழம் நைவேத்தியம் செய்து, கற்பூரம் ஏற்றி நமஸ்கரிக்க வேண்டும்.

நைவேத்தியமாக அக்கார வடிசில் செய்தால் விசேஷம். யாரேனும் ஒரு சுமங்கலியைச் சாப்பிடச் சொல்லி, ஒரு ரூபாய் நாணயம், தேங்காய், பழம், முடிந்தால் ரவிக்கை கொடுக்கலாம்.

ஆரத்தி எடுத்தபின்னர் அந்த வட்ட வடிவமாக வைத்த நாணயங்களை பீரோவில், பணப்பெட்டியில் போட்டு வைக்கவும். குங்குமத்தால் அர்ச்சனை செய்தால் அஷ்ட ஐஸ்வர்யம் பெருகி, அஷ்ட லக்ஷ்மிகளும் நம் இல்லத்தில் வாசம் செய்ய வருவார்கள் என்பது நம்பிக்கை.

— வசந்தா வேணுகோபால்.

# MADEMOISELLE

BOUTIQUE





*For Exclusive Designer Dresses in Salwars. Dhotis churidars – and a classy blend of East & West*

2nd FLOOR
GEMINI PARSN
COMPLEX
KODAMBAKKAM
HIGH ROAD
MADRAS – 600 006

PASU







காதலின் ஆழ்ந்த உணர்வுகளுக்குச் வடிவம் தருகிறார் தொடர்கதை
உஷா சுப்பிரமணியன்:

# மோகம் என்பது இது தானோ?





பாசத்தின் தளிர் உணர்வுகளுக்குத் வடிவம் தருபவர் தொடர்கதை
சுபா:

# சின்னச் சின்ன கனவுகள்

## பரபரப்பான முழு நீள நாடகம்

அதிக பக்கங்கள்:: அதே விலை!

அந்தக் காலம் தொட்டு இந்தக் காலம் வரை உறவு முறையில் பெண் எடுப்பதை பலரும் பெருமையாகவே கருதுகின்றனர். பெண்ணைத் தாய் மாமாவுக்குக் கொடுப்பது. அத்தையின் மகனுக்குக் கொடுப்பது என்றெல்லாம் உறவு முறையிலே கல்யாணத்தை முடிப்பவர்கள் நிறைய பேர் இருக்கிறார்கள். மாமாவுக்குத்தான் முதல்மரியாதை கொடுக்க வேண்டும் என்று சில சமூகத்தினரிடம் கட்டுப்பாடே இருக்கிறதே. அதில் கொஞ்சம் குறைந்தாலும் வெட்டுப் பழி, குத்துப் பழியில் கூட முடிவதுண்டு.

கல்யாண வீடுகளில் தோள் தூக்குவதானாலும் சரி, ஒதியிடு (மொய் எழுதுவது)வதானாலும் சரி, எல்லாவற்றுக்குமே முதல் ஆள் மாமாதான். மாமாவைக்கலந்து ஆலோசித்துதான் கல்யாணத்தையும் முடிக்க வேண்டும்.

முஸ்லீம் சமூகத்தினரிடையே சித்தப்பா பெண் பெரியப்பா பெண் (சகோதரி உறவு) களைக் கட்டிக் கொள்கின்ற பழக்கம் கூட இருக்கிறது.

இந்த உறவு முறை கல்யாணங்கள் எல்லாம் ஏன்? என்று ஒரு கேள்வியை கேட்டால் அதற்குக் கிடைக்கும் விடைகள் இரண்டு. ஒன்று சொந்தத்திற்குள் கல்யாணம் செய்து வைக்கப்படுவதால் பணமோ நிலபுல சொத்துக்களோ, வேற்று ஆள் கைக்குப் போகாது. இரண்டாவது பழகின இடத்துக்கே பெண் போவதால் அதிகமாக அவள் கஷ்டப்படமாட்டாள். புகுந்த வீட்டோடு எளிதில் தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டு விடுவாள். ஆனால் மருத்துவர்கள் நெருங்கிய உறவினர்களிடையே திருமண உறவு கூடாது என்கிறார்கள். இதில் எது சரி? —

ஜெயராஜ்:

இவர் சென்னையில் வங்கி ஒன்றில் உயர் அதிகாரி. மனைவி ருக்மணி, ஜெயராஜின் மாமாவின் மகள். சின்ன வயதிலேயே இவர்களுடைய கல்யாணத்தை நிச்சயித்துவிட்டார்களாம். உறவு முறையில் திருமணம் செய்து கொண்டதால் இவர்களுடைய வாழ்க்கையில் ஒன்றும் பிரச்னை இல்லை என்கிறார்கள்.

"சின்ன வயதிலிருந்தே ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டதனால் கல்யாணமான பின்பு எங்களால் எல்லாப் பிரச்னைகளிலும் ஒத்துப் போக முடிகிறது. என்னுடைய ருசி, சமையலில் எப்படி இருக்கும் என்பதுகூட அவளுக்குத் தெரியும். அவளுக்கு என்ன கலர் புடைவை பிடிக்கும் என்பது எனக்கும் தெரியும். எனவே ஒருவரை அனுசரித்து ஒருவர் நடந்து கொள்கிறோம். எல்லார் வீட்டிலும் இப்படித்தானே என்று கேட்கலாம். அயல் உறவில் பெண் எடுத்தால் ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளவே ஒருசில ஆண்டுகள் ஆகும்" என்றனர்.

உறவு முறை கல்யாணத்தில் பிறக்கும் குழந்தைகள் ஆரோக்கியமாக இருக்காது என்கிறார்களே என்று கேட்டதற்கு, "எனக்கு ஒரு பெண், ஒரு பையன். இரண்டு பேருமே நல்ல ஆரோக்கியத்தோடுதான் இருக்கிறார்கள். வகுப்பில் என் பெண்தான் முதல் ரேங்க். பாட்டிலும் ஓவியத்திலும் அவளுக்குத் தானாகவே ஆர்வம் பிறந்து இப்போது இரண்டிலும் அவள் சிறந்து விளங்குகிறாள். பையனுக்கு விளையாட்டில் நல்ல ஈடுபாடு உண்டு. முதல் மூன்று ரேங்கிற்குள் பையனும் வந்து விடுகிறான்


டாக்டர் என். ராஜேந்திரன்


ஜெயராஜ் தம்பதியினர்

# உறவு முறையில் கல்யாணம் செய்வது சரியா?

குழந்தைகள் வாங்கியிருக்கும் பரிசுப் பொருள்களையும், நற்சான்றிதழ்களையும் கொண்டு வந்து காண்பிக்கிறார்கள் ஜெயராஜ் தம்பதியினர்.

இதற்கு நேர்மாறான ஒரு குடும்பத்தை பல்லாவரத்தில் சந்திக்க நேர்ந்தது. சிவராம கிருஷ்ணன் ராதிகா தம்பதியர்களுக்கு ஒரே குழந்தை. அந்தக் குழந்தைக்கு மூளை வளர்ச்சி இல்லை, உறவு முறை கல்யாணம் செய்து கொண்டு சரியான சந்ததி இல்லாமல் தவிக்கிறார்கள் சிவராம கிருஷ்ணன் தம்பதியினர்.

''எனக்கு அவர் தாய் மாமா. சொந்தம் விட்டுப் போகக் கூடாதுன்னு கல்யாணம் பண்ணி வெச்சாங்க. கல்யாணமான ஒன்றரை ஆண்டு காலம் எங்கள் மண வாழ்க்கை இனிக்கத்தான் செய்தது. ஆனால் எனக்குக் குழந்தை பிறந்த பிறகுதான் எங்களது வாழ்க்கையிலே அர்த்தமேயில்லை என்பதைப் புரிந்துக் கொண்டோம்'' என்று அழ ஆரம்பித்தார் ராதிகா.

''ஒரு குழந்தையைப் பெற்று அவனை நல்ல முறையில் படிக்க வைத்து, உலகம் புகழ அவன் பெயர் எடுக்க வேண்டும் என்று தான் எந்தத் தாயும் விரும்புவாள். ஆனால் என்னைப் பொறுத்தவரையில் அது வெறும் பகல் கனவுதான். எங்கள் இருவரின் ரத்தத்திலும் சில பொதுவான அணுக்கள் இருக்கின்றனவாம். நாங்கள் சொந்தக்காரர்கள் என்பதால் இப்படி இரத்தம் பொதுத் தன்மை உடையதாக இருக்கிறது. இந்தப் பொதுவான அணுக்களினால் எங்களுக்குப் பிறக்கும் குழந்தைகள் எல்லாமே மூளை வளர்ச்சி குன்றித்தான் இருக்கும் என்று சொல்லிவிட்டார்கள். அதனால் ஒரே குழந்தை போதும் என்று முடிவுக்கு வந்துவிட்டோம். இந்தக் குழந்தைக்கும் ஆயிரக் கணக்கில் செலவழித்துப் பயனில்லை. எல்லாம் விதி தான்.''

நான்கு வயது குழந்தை தொட்டிலில் அசைவின்றிப் படுத்திருந்ததை பார்க்க முடிந்தது.

இந்த இரண்டு குடும்பங்களையும் பற்றி சென்னை மருத்துவக் கல்லூரியில் வேலை பார்க்கும் டாக்டர் என். ராஜேந்தரிடம் சொன்னோம். எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்டு, முதலிலேயே ஒரு விஷயத்தைத் திட்டவட்டமாகச் சொன்னார். ''உறவு முறையில் கண்டிப்பாகத் திருமணம் செய்து கொள்ளக் கூடாது. உறவுமுறை திருமணங்கள் நூற்றுக்குத் தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் மகிழ்ச்சிகரமாக இருப்பதில்லை''.

''ஒன்றிரண்டு குடும்பங்கள் வேண்டுமானால் பிரச்சினை இல்லாமல் இருக்கலாம். அதற்கென்று எல்லா உறவுமுறை திருமணங்களும் சந்தோஷமாக இருக்கின்றன என்று அர்த்தமாகிவிடாது.

ஒரே கோத்திரத்தில் பெண் எடுக்கக் கூடாது என்று சொல்வார்கள். இது ஏன் தெரியுமா? தாயாதிகள் எல்லோரும் ஒரே வம்ச வழியினர். இவர்களுடைய ரத்தம் பொதுவானது. எனவே சகோதர மனப்பான்மை கொள்ள வேண்டும் என்றுதான் அப்படி அமைத்தார்கள். அதேபோன்று மாமா அத்தை உறவுகளும் இரத்தச் சம்பந்தப்பட்டவைதான். பாரம்பரியமிக்க சில ஜீன்கள் இவர்கள் இரத்தத்தோடு இருக்கத்தான் செய்யும். அவைகளால் கோளாறுகள் வர வாய்ப்புண்டு.

காது கேட்காமல் போவது, சர்க்கரை வியாதி, இரத்த அழுத்தம், ஹார்ட் அட்டாக்— இவைகளெல்லாம் பரம்பரையோடு சம்பந்தப்பட்டவை. அப்பாவுக்கு சர்க்கரை வியாதி என்றால் அவருடைய பையன் பெண்களுக்கும் வர வாய்ப்பு இருக்கிறது. இது அம்மா வழி உறவுக்கும் பொருந்தும். அப்பா வழி உறவுக்கும் பொருந்தும். எனவே நாம் தான் கவனமாக இருக்க வேண்டும்.

'தலசிமியோ மேஜர்' என்றொரு வியாதி இருக்கிறது. இது ஆண் பெண் இருவரும் நெருங்கிய உறவினராக இருந்தால் அவர்களுக்குப் பிறக்கக் கூடிய குழந்தைகளுக்கெல்லாம் மூளை வளர்ச்சி குன்றித்தான் இருக்கும். நம் உடம்பில் உள்ள குரோமோசோம்களை வைத்துத் தான் இவைகளை முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. உறவுமுறை கல்யாணத்தில் பலருக்குப் பாதிப்பு ஏற்படுவது 'தலசிமியோ மேஜரால்' தான்!

இவைகளையெல்லாம் பொது மக்களுக்கு எடுத்துச் சொல்லி பாதிக்கப்பட்டவர்களுக்கு அறிவுறுத்த சென்னை பொது மருத்துவ மனையில் 'ஜெனிடிக் கவுன்சிலிங்' என்று ஒரு பிரிவை ஏற்படுத்தியிருக்கிறார்கள்.

சர்க்கரை வியாதி, தலசிமியா மேஜர் போன்ற நோய்களை உடைய பெற்றோர்கள் எப்படி செயல்பட வேண்டும்? அவர்களுக்குப் பிறக்கக்கூடிய குழந்தைகளை எப்படி வளர்க்க வேண்டும் போன்றவற்றை ஜெனிடிக் கவுன்சில் மூலம் ஆலோசனையாக வழங்குகிறார்கள். வருமுன் காப்பதே நல்லது. உறவுமுறை கல்யாணம் அவ்வளவு உகந்தது இல்லை என்பதுதான் மருத்துவர்களின் கணிப்பு. வந்தபின் கஷ்டப்படுவதை விட நெருங்கிய உறவில் திருமணங்களைத் தவிர்த்தால் ஆரோக்கியமான சந்ததிகளைப் பெறலாம்.

பேட்டி தொகுப்பு:

**கீழாம்பூர் சங்கரசுப்பிரமணியன்**

குழந்தைகளை ஒப்பிட்டுப் பேசாதீர்கள். உறவினர்கள், மற்றவர்கள் முன்னிலையில் அதிகமான விமர்சனம், அதிகமான புகழ்ச்சி அவர்களின் மன நிலையைக் கெடுக்கும்.

# உங்கள் குழந்தைக்கு
# அளியுங்கள் ஸெரிலாக் அனுகூலம்

## திட உணவின் முதற் சுவையிலிருந்தே.

நான்கு மாதங்கள் ஆகும் பொழுது உங்கள் குழந்தைக்கு பாலுடன் கூட திட உணவும் தேவை. அவனுக்கு ஸெரிலாக்கின் அனுகூலங்களைப் புகட்ட இதுவே உகந்த வேளை.

**போஷாக்கு அனுகூலம்:** ஒவ்வொரு தடவை ஸெரிலாக் ஊட்டும் பொழுதும் உங்கள் குழந்தைக்குத் தேவையான புரத சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின் மற்றும் தாது ஆகிய எல்லா போஷாக்கு சத்துக்களும் அவனுக்கு கிடைக்கின்றன. அனைத்தும் குழந்தையின் விசேஷ தேவைக்கு ஏற்றபடி சரியான விகிதத்தில் தயாரிக்கப்பட்டுள்ளன.

**சுவையில் அனுகூலம்:** ஸெரிலாக் நலம் தரும் போஷாக்குடன் நல்ல சுவையும் கொண்டது. ஸெரிலாக் சுவை என்றாலே குழந்தைகளுக்கு கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அனுகூலம் :** ஸெரிலாக் குழந்தை உண்பதற்கேற்ப முன்கூட்டியே பதமாக்கப்பட்டுள்ளது. கொதிக்கவைத்து ஆறிய வெது வெதுப்பான நீரில் கலந்தால் போதும். நொடியில் தயார் ஸெரிலாக் உணவு.

உங்கள் குழந்தைக்கு சரியான விகித சத்து கிடைக்கவும், சுகாதார முறையில் கலக்கவும், டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.

**இலவச ஸெரிலாக் புத்தகம் பெற**
இம்முகவரிக்கு எழுதவும் :
ஸெரிலாக்,
தபால் பெட்டி எண் : 3
புது டில்லி 110 008.




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**



# சில பிரச்னைகள்; சில குடும்பங்கள்!


மாதங்கி

**தொடர்ந்து கூட்டுக் குடும்பத்தில் மருமகளாக வாழும் மாதங்கி சங்கரலிங்கம்**

மாதங்கி சங்கரலிங்கம் பெரிய குடும்பத்தில் மூத்த மருமகள்.

மாமியாரின் விதவைச் சகோதரி, மாமனார், மாமியார், கணவரின் அண்ணன் குழந்தை இத்தனை பேரையும் தாங்கும் பரந்த மனது. இதோடு இத்தம்பதிகளின் இரண்டு குழந்தைகள். நான்கு சகோதரிகள், மூன்று சகோதரர்கள் கொண்ட பெரிய குடும்பம். இத்தனைக்கும் நடுவில் முகம் சுளிக்காமல் இருந்து, பொறுப்பாக ஒரு மருமகளுக்கு உரிய கடமைகளை ஆற்றும் மாதங்கி.

"நீங்கள் திருமணமாகி வரும் பொழுதே மாமியாரின் சகோதரி, உங்கள் கணவரின் அண்ணன் குழந்தை, மாமனார் — மாமியார் என்று கூட்டுக் குடும்பமாக இருந்தபோது நீங்கள் என்ன நினைத்தீர்கள்?

"திருமணத்தைப் பற்றிய பெரிய எதிர்பார்ப்பு எதுவும் இல்லை எனக்கு. அதோடு நான் பிறந்த வீடும் பெரிய குடும்பம். குடும்பத்தில் மூத்த பெண்ணானை நான் பொறுப்பாக நடக்க வேண்டிய சூழ்நிலே. ஆகவே திருமணமானதும் பிரச்னை எதுவுமில்லை. பார்க்கப் போனால் இவர்கள் யாராவது வெளியூர் போய்விட்டால்தான் வீடு என்னவோ மாதிரி இருக்கும். இப்பொழுது என் சின்ன மாமியார் ஊரிலில்லை. எனக்கு மிகவும் கஷ்டமாக உள்ளது!" என்றார்!

"இக்காலத்தில் தான் உண்டு, தன் குடும்பம் உண்டு என்று இருக்கும் பொழுது..." என்று ஆரம்பித்தேன்.

"என் பெரிய நாத்தனாரிடமிருந்து நான் கற்றுக் கொண்ட விஷயங்கள் அதிகம். அவரின் மன உறுதியைப் பார்க்கையில் நான் செய்து கொண்டிருப்பது அதிகமல்ல" என்று சொல்லும் மாதங்கி தன் நாத்தனாரை மனமாரப் பாராட்டுவது புரிந்தது.

பேட்டியின் போது உடனிருந்த மாமியார் "இவள் நன்றாகக் கோலம் போடுவாள். கையெழுத்து அழகாக இருக்கும்" என்று மருமகளின் பெருமைகளை அங்கீகரித்து ஆமோதிக்கிற விதத்தில் பேசினார்.

இவர்களின் வெற்றியின் ரகசியம் என்னவென்று புரிந்தது.

**பஸ் ஸ்டாண்டில், தன் மருமகளைப் பற்றிப் புலம்பிக் கொண்டிருந்த திருமதி ராஜாம்பாள் —**

"என் புருஷன் போய் ஐந்து வருஷம் ஆகிப் போச்சு. என் மகனும், பெண்டாட்டி கூட சேர்ந்துக்கிட்டு என்னைத் தனியா விட்டுட்டான். நான் ஆவடியிலே இருந்து மனசு தாங்காம பேரப் பிள்ளைகளைப் பார்க்க வந்தேன். அவ (மருமகள்) வேலைக்குப் போயிருந்தா. பிள்ளைங்க அநாதை மாதிரி கிடக்குது. நான் இங்கே இருந்தா இப்படி இருக்குமா?"

"ஏன் வீட்டை விட்டுப் போனீங்க? உங்களுக்கு இல்லாத உரிமையா?" என்றதும் ஒரு பிடிபிடித்துக் கொண்டார்.

"வேண்டாதவ கைபட்டால் குற்றம். கால் பட்டால் குற்றம். தொட்டது தொண்ணூறுக்கும் சண்டை. என் மகன் அவளை அடக்கி வைக்கலை. வயசான கிழவி, புருஷன் போய் கஷ்டப்படறாளுன்னு பார்க்காமே சண்டை

போட்டா. வீட்லே இருக்க முடியலே. தனியா பொங்கி சாப்பிடறேன். மனசு கேக்கலே. புள்ளைங்களைப் பார்க்க வந்தேன்'' என்ற பொழுது அத்தாயின் பாசம் புரிந்தது.

''ஏம்மா, கேக்கறேன். என்னதான் பொம்பளைங்க சண்டை போட்டாலும் மாமியார்க்காரி தனியா இருக்கிறான்னு தோணுது? புருஷன்கிட்டே சொல்லிக் கூட்டிக்கிட்டு வர வேணும். ஆனா இல்லாதது பொல்லாதது சொல்லி இன்னும் இல்லே பிரிக்கிறா?'' என்று புலம்பிய பொழுது வேதனையாக இருந்தது. இனி வரும் நாளில் நோய், நொடி வந்தால் என்ன செய்வது என்ற பயமும், தனிமையும் அது தரும் சோகத்தின் நடுவில் என்றுவது ஒரு நாள் தன் மருமகள் தன் தவறினை உணர்ந்து தன்னை அழைத்துக் கொள்வாள் என்ற நம்பிக்கையுமாக பஸ் ஏறிப் போன அந்த முதியவளைப் பார்த்த போது பரிதாபமாக இருந்தது.

**மாமியாருடன் சண்டை போட்டுக் கொண்டு பிரிந்து போய் மறுபடியும் ஒன்று சேர்ந்த திருமதி சீதா, கோவை.**

''மாமியாரோட சில எதிர்பார்ப்புகள் எனக்குப் பிடிக்கலே. இந்தக் காலத்திலே மாமியார் சேரிலே உட்கார்ந்தா நான் கீழே உக்காரணுமின்னு சொல்றுங்க. ஓயாமே வேலை செய்யணும். என்னாலே அவ்வளவு செய்ய முடியலே. ஓரளவிற்கு மேலே செய்ய முடியாத அளவு என் உடம்பு உபத்திரவம். சதா குற்றம் சொல்லிக் கொண்டு... ஒரு ஸ்டேஜிலே பிரிஞ்சு போயிட்டோம்.''

''மறுபடி இப்ப எப்படி ஒன்று சேர்ந்தீங்க?''

''பிரிஞ்சு போனதிலே ஒரு மனமாற்றம் இரண்டு பேருக்குமே. எப்படின்னு நம்மளை நாமே எடை பார்க்கிற மாதிரி எனக்கும் சிலதை விட்டுக் கொடுத்தா என்னன்னு தோணிச்சு. அவங்களுக்கும் தோணியிருக்குது. எதிர்பார்ப்புகளை குறைச்சுக்கிட்டாங்க. இன்னிக்கு சின்னப் பிரச்னையில் போயிடலாம். ஆனா எதிர்காலத்தை நினைக்கிறப்ப பெரியவங்க வேணுமின்னு தோணுது. நல்லது கெட்டது ஆலோசனை சொல்ல... அதைவிட எந்தப் பிரச்னையையும் அவங்ககிட்டே சொல்லிக்கிட்டு ஆறுதல் தேட முடியறதே...

''இப்பொழுது உங்கள் மனநிலை என்ன?''

''விட்டுக் கொடுக்கிற தன்மையும், புரிந்து கொள்கிற மனப்பக்குவமும் வேணும். சில நன்மைகளுக்காகச் சிலவற்றை விட வேண்டும். இப்பவும் பிரச்னைகள் வராமவில்லை. ஆனா முந்தி இருந்த மாதிரி படபடப்பு, டென்ஷன் இல்லை. சாதாரணமாக, இயல்பாக இருக்கக் கூடிய பக்குவம் வந்து விட்டது. ஒருவேளை நடுவில் பிரிஞ்சு போய் வந்ததேனே அதனாலா?'' என்று சிரித்தார்.

**கூட்டுக் குடும்பத்தில் இருந்து பிரிந்து வாழும் மருமகள் வேதவல்லி.**

''எந்தப் பெண்ணுமே திருமணமாகி புகுந்த வீட்டிற்குள் வரும்போதே தன் கணவனைத் தனியாக அழைச்சுக்கிட்டுப் போயிடணுமின்னு நினைக்க மாட்டா. அவளும், அம்மா, அப்பா, அண்ணன், தங்கைகளோட வாழ்ந்தவள்தானே?

நானும் என் 'இன் லாஸோட' ஒத்துப் போகணுமின்னு எவ்வளவோ முயற்சி செய்தேன். வந்த புதுசிலே அவரோட வெளியே கிளம்பும் போது வேணுமின்னே வீட்டு வேலையைச் சொல்வாங்க. 'ஆபீஸ்லேர்ந்து நேரா வீட்டுக்கு வா. உங்க அம்மா வீட்டுக்குப் போயிடாதே' என்பார் மாமி சிடுசிடுன்னு.

ஓரளவு சுதந்திரமா எங்கம்மா வீட்ல வளர்ந்த எனக்கு ஆபீஸ் போகும்வரை சமையலறை, ஆபீஸ், திரும்பவும் ராத்திரியானா சமையலறைன்னு ஒரு இயந்திரமா மாற வேண்டியதாப் போச்சு. அப்படியும் பொறுத்துக்கிட்டுதான் போனேன்.

இத்தனைக்கும்மேலேயும்என்னைக்கரிச்சுக் கொட்டி என் வாழ்க்கையை மாமியார் நரகமாக்கினப்போதான் என்னால் பொறுக்க முடியலே. கல்யாணமாகி ஐந்து வருஷமாகியும், ஒரு குழந்தைக்குத் தாயானப்புறமும் என்னை மிரட்டிக்கிட்டே இருந்தது எனக்குப் பிடிக்கலே. தாங்க முடியாத நிலையிலே நானும் பேச, இதுக்காகவே காத்துக்கிட்டிருந்த அவங்க எகிறிக் குதிக்க வீடே நரகம் தான். அவங்களுக்கு இது ஒரு சுவாரஸ்யமான பொழுது போக்கா இருந்தது. ஆனா நான்சண்டைபோட்டுட்டுப்பலநாள்பட்டினியோட ஆபீசுக்குப் போனதுதான் மிச்சம்.

நான் செய்த புண்ணியம் என் கணவர் என்னைச் சரியாகப் புரிந்து வைத்திருந்தது. என் உடம்பு ஒரு ஸ்டேஜுக்கு மேல் கெட ஆரம்பித்த உடனே அவர் தலையிட்டுச் சரி செய்யப் பார்த்தார்.

இது எதற்கும் பிரயோஜனம் இல்லாம போகவும்தான் நான் தனிக் குடித்தனம் வந்தேன். ஏனோ தாய்மார்கள் தங்கள் பெண்களை நினைப்பதுபோல,மருமகள்களைநினைப்பதில்லை. இதனால் எத்தனை கொடுமைப்பட்டாலும் மருமகள்தான் கெட்ட பெயர் வாங்குகிறாள். ஆனால் நாங்களும் அமைதியே இல்லாமல் எத்தனை நாள் தாங்க முடியும்?

பேட்டி: **பூங்கோதை குருதாஸ்**

கணவனின் சகோதர, சகோதரிகளின் உறவைப் பலப்படுத்துபவள் மனைவி. கணவனுக்கு அவர்களுடன் மன வேற்றுமை, கருத்து வேற்றுமை இருந்தால் அதைப் பெரிது படுத்தாமல் மனைவி சாதாரணமாக இருந்தால் சில சமயங்களில் நல்ல பலனிருக்கும். 'அண்ணி எவ்வளவோ பரவாயில்லை' என்றும் உணர்ந்து கொள்வார்கள்.

# ஆத்மாவின் சன்னதியில்...

விமலா ரகுநாதன்

**வி**ழிப்பு வந்தவுடனேயே படுக்கையை விட்டுத் துள்ளி எழுந்தாள் ரேவதி. தெளிந்தவுடன், 'அமுத சுரபி'யைப் பார்க்க வேண்டும் என்று ஆவல் தோன்றியது. அமுத சுரபி.... நல்ல பெயர்.... சாந்தி மாமி எதைச் செய்தாலும், எதை நினைந்தாலும் அழகாகத் தோன்றுகிறது. அது எப்படி....

ஓசைப்படாமல் கதவை திறந்து கொண்டு வெளியே வந்தாள். முதல் நாள் கொடியில் விட்டு வைத்திருந்த பிச்சிப் பூ இயல்பாக மலர்ந்து மணம் வீசிக் கொண்டிருந்தது. சற்று எட்டி, மாட்டுக் கொட்டிலில் நிலைகொள்ளாமல் தவிக்கும் பசுக்கள். அந்த நான்கிலும் பளிச்சென்று தெரியும் மஹாலக்ஷ்மி. மாமியின் செல்லக் குட்டி. மாமியைப் பார்க்காமல்' தண்ணீர்கூடக் குடிக்காது..... என்னைப் போல....

''சுரபி....'' மெல்ல அழைத்துக் கொண்டு அருகில் சென்றாள். பிறந்து மூன்றே நாட்கள் ஆகியிருந்த சுரபி, கயிற்றை அறுத்துக் கொள்வதுபோல் துள்ளிக் கொண்டிருந்தது.

ஊஹூம்.... இப்போ அவிழ்த்துவிடக் கூடாது. பால்கார தேவு வந்தால் கோபித்துக் கொள்வார்!

இன்னும் கொஞ்ச நேரத்தில் வெளிச்சம் வந்துவிடும். இந்த வெளிச்சமும் இருளும் சேரும் அந்த கணத்திற்குத்தான் எத்தனை அழகு.... கொள்ளை போவதுபோல் இத்தனை அழகு இங்கே கொட்டிக் கிடக்க, உஷாவும் புவனாவும் எப்படித் தூங்குகிறார்கள்.

ரேவதி, வீட்டைச் சுற்றி மெதுவாக நடந்து, 'கேட்'டைத் திறந்தாள். தேவு நுழைந்தார்.

''என்னம்மா.... எழுந்தாச்சா?''

''இன்னிக்கு என்ன இத்தனை நேரம் தாத்தா. சுரபி நிலை கொள்ளாம துள்ளிண்டிருக்கு....''

இரண்டு பால் சொம்புகளையும் வாங்கி உள்ளே வைத்துவிட்டு, வெளியே நோக்கிய போது, 'பொல பொல'வென்று விடிந்துவிட்டிருந்தது.

''ரேவதிம்மா.... சுரபி கொஞ்ச நேரம் விளையாடட்டும். பின்னே கட்டிப் போட்டுடு. மண்ணை எங்காச்சும் தின்னுடப் போவுதும்மா.. கொழந்தைதானே....''

ரேவதிக்கு இனி வேலையில்லை. சாந்தி மாமி எழுந்துவிட்டால் கூடக் கூடச் சுற்றி வரத்தான் தோன்றும். அந்த அழகைப் பார்த்து வியக்கத்தான் தோன்றும். மஞ்சள் மினுமினுக்க, மாமி வீட்டைச் சுற்றி வளைய வரும் நேர்த்தியைக் காணக் காண ஆயிரம் கண் இல்லையே என்று தோன்றும்...

''ரேவதி காப்பி சாப்பிடும்மா....''

ரேவதி காப்பி குடித்த கையுடன் பூக்கூடையை எடுத்துக் கொண்டு வெளியே வந்தாள்.

வேலி படல் ஓரமாக டிசம்பரும் கனகாம்பரமும் பூத்துக் குலுங்கிற்று. அதை உஷாவும், புவனாவும் கல்லூரிக்குப் போகும் சமயம் தொடுக்கலாம். முதலில் மாமாவுக்கு....

கிள்ளு கிள்ளாக துளசியைப் பறித்துத் தனியாக வைத்தாள். பவழ மல்லியையும், கஸ்தூரி அரளியையும், ரோஜாவையும் அலுங்காமல் நலுங்காமல் பறித்து வந்தாள்.

இரண்டு மூன்று வருடங்களுக்கு முன்பு, இந்த வீட்டில் கொஞ்ச காலத்துக்காவது ஓர் உறுப்பினராக வாழ வரும்போது, இந்த வீட்டைப் பற்றி, இதில் இருப்பவர்களைப் பற்றி அவளுக்கு ஒன்றுமே தெரியாது.

பட்டணத்து மாமாவும் மாமியும் இரண்டு மூன்று முறைகள் ரங்கராஜபுரத்துக்கு வந்த போது அதிசயத்தோடு பார்த்திருக்கிறாள். மாமி ஆசைப்பட்டவுடன் ஆற்றுக்குக் குளிக்க அழைத்துச் சென்றிருக்கிறாள். மாமிக்குப் பிடிக்குமே என்று, கொண்டை சோளத்தை உப்புடன் வேக வைத்து உதிர்த்து மிளகுப் பொடி தூவி ஆசையுடன் கொடுத்திருக்கிறாள்.

அம்மா அன்று அவளைக் கேட்டபோது, அம்மாவை விட்டு பிரிய வேண்டுமே என்ற வருத்தத்துடன், புதிய வாழ்க்கையில் தனக்கு ஒன்றிப் போகத் தெரியாதே என்று பயந்திருக்கிறாள்.

இன்றோ! அந்த பயமெல்லாம் மாமா மாமியிடம் பக்தியாக, விசுவாசமாக, உருவெடுத்துவிட்டது. அவர்கள்தான் மனிதர்கள். அவர்கள் நினைப்பதுதான் நினைவு.... அவர்கள் வாழ்வதுதான் வாழ்க்கை.... அவர்கள் சொற்களெல்லாம் தேவனின் வார்த்தை

கள்.

''வீடு பிடிச்சிருக்காம்மா.''

''ஏதோ கோவில்ல இருக்கற மாதிரி இருக்கு மாமி....''

''அவாவா வீடு அவாவாளுக்குக் கோவில்.''

மாமியின் ஒவ்வொரு வார்த்தைக்கும் ஓர் உரை எழுத வேண்டும் போல் தோன்றும்.

வேலைக்காரன் பசுக்களைக் குளிப்பாட்டி, கன்றுகளுடன் நிற்க வைத்திருந்தான்.

''வெள்ளிக்கிழமையெல்லாம் விடியறச்சயே இங்கே அழகா விடியறதே.... எப்படி மாமி.....?''

மாமி பதில் பேசாமல் புன்முறுவலுடன் வர, ரேவதி மஞ்சள் குங்குமத் தட்டுகளை எடுத்து வந்தாள்.

உஷா, புவனா இருவரும் வந்தவுடன், மாமி, அழகாக பொறுமையாக, தபஸ்வினி போல், பசுக்களுக்கும், கன்றுகளுக்கும், அவளைப் பொறுத்தவரை அறியா குழந்தைகள்—மஞ்சள் பூசி, குங்குமம் இட்டு வலம் வர, மற்ற மூவரும் அவளைப் பின்தொடர்ந்தனர்.



ரேவதிக்கு என்ன தோன்றியதோ....

''மாமி, இப்படி நில்லுங்கோ.''

ரேவதி வணங்கி எழுந்தாள்.

''இப்பத்தான் இந்த பூஜை பூர்த்தியாகும்.''

மாமா சாப்பிட்டுவிட்டு காலையில் அலுவலகம் சென்றுவிட்டால், அந்தி நேரத்தில் வீடு திரும்புவார். மற்றவர்களும் கல்லூரி, பள்ளி என்று சென்றவுடன், ரேவதி முழுக்க முழுக்க சாந்தி மாமிக்கு அடிமை.

மாமி பரபரப்பின்றி வீட்டு வேலைகளில் ஈடுபடுவாள். ரேவதியுடன் தோட்டத்தைச் சுற்றி வருவாள்.

நிழல் தரும் நெல்லி மரத்தடியில், அடர்த்தியான பவழமல்லி நிழலில், மல்லிகை கொடிக்கருகில் என்று இருவருமாக ஆச்வாசப்படுத்திக் கொண்டு மாட்டுக் கொட்டிலில் அமர்ந்துக் கொள்வார்கள். சாந்தி மாமியைப் பொறுத்தவரை இவை



யெல்லாம் உயிரும் உணர்ச்சியுமுள்ள ஜீவன்கள்.

மஹாலக்ஷ்மி, நர்மதா, காவேரி, சிந்து....

இவைதான் மாமியின் அத்யந்த தோழிகள்....

மாமி பழமையான சம்பவங்களை அனுபவங்களைப் பற்றி பேசும்போது ராமாயணம் மாதிரி இருக்கும். அதைவிடவும் சுவையாக இருக்கும்....

பின்பு, மறுபடியும் நிதானமான போக்கில் வேலைகள். மாலை உஷா, புவனா, முரளி, மோகன் வந்தவுடன், சிற்றுண்டி, பேச்சு சிரிப்பு என்று பொழுது போகும்.

அவர்களிடம் கள்ளமில்லை, புறமில்லை, கபடில்லை, பொய்யில்லை.

இது எப்படி....

மாமாவின் சாந்தமான போக்கு, உண்மையான மனம், சத்தியத்தில் வைத்திருந்த பக்தி, இவை காரணமாய் இருக்கலாமா....

அல்லது சாந்தி மாமியா....

சாந்தி மாமிக்கு உடம்பு சரியில்லை. உதவியாக கொஞ்ச நாட்கள் இருக்க வேண்டும் என்றபோது, படிப்படியான வேலைகள் மாத்திரம்தான் கண்முன் தோன்றின.

இன்று, கூடவே நிழலாக இருந்துவிட்ட இந்த இரண்டு மூன்று வருடங்களில், திரும்பவேயில்லை. எதையோ அரைகுறையாக உணர ஆரம்பித்திருந்த சமயம்.... எதை என்று தெரியவில்லை.

மாமியும், மாமாவும் அதைப் பற்றி, அவள் ஊர் திரும்புவதைப் பற்றிக் கேட்கவில்லை. அவள், அவர்களின் உயிர்நாடியாக மாறிக் கொண்டிருந்தாள்.

இல்லையில்லை.... அவர்கள் அதுவும் இல்லை. அந்த வீடு, அந்தக் கோயில், அவள் உயிர் நாடியில் கலந்து கொண்டிருந்தது. அதுதான் தேவு, தினமும் அந்த வீட்டை பிரதக்ஷிணமாக வருகிறாள்....!

பூப்பாத்திகளையெல்லாம் வேரில் வெயில் ஏற கொத்திக் காயப் போட்டுவிட்டு, வேலைக்காரன் போய்விட்டான். அவ்வளவு

> காலையில் சற்று நேரத்தில் எழுந்தால், குழந்தைகள் மீது கோபம் வராது. இல்லாவிட்டால் "படுக்கையைச் சுருட்டி வையேன்" "இங்கே வா, நீயே குளிச்சுக்க," "கூட மாட ஹெல்ப் பண்ணினா என்ன?" "எனக்கும் அவசரம், இந்த வீட்டிலே ஒருத்தரோட ஒத்தாசையும் கிடையாது" என்று சிடுசிடுவென்று விழுவதை விட, கொஞ்சம் பிளான் பண்ணினால் எத்தனையோ சாதிக்க முடியும்.

ஒன்றும் 'சுள்'ளென்று வெயில் இல்லை. பசுமையான செடிகளும், கொடிகளுமாக ஒரு தபோவனம் போல் இருந்தது. நெல்லி மரம் கொள்ளாத அளவு சரம் சரமாக காய்கள்.... அவை இனிப்பாக இருக்கும் என்று மாமி சொல்லக் கேட்டிருக்கிறாள்.

நாளை கிளம்ப வேண்டும். அப்பா வருகிறார், அழைத்துப் போக....

வீட்டைச் சுற்றிச் சுற்றி வந்தாள். தோட்டத்தை, கொட்டிலை, சுரபி, அமுதா மஹாலக்ஷ்மியை....

நெல்லி மரத்தடியில் வரும்போது, தெய்வ சாந்நித்யம் தவழும் இடத்தை மீண்டும் நோக்கும்போது....

"ரேவதி....." மாமி அழைக்கும் குரல் கேட்டு ஓடிச் சென்றாள். அப்பா வந்திருந்தார்.

"நாளை காலையிலேயே கிளம்புகிறோம்."

"சௌகரியம் போல செய்யுங்கள்...."

"ரேவதிக்குக் கல்யாணம் செய்துவிடலாம் என்றிருக்கிறோம். இரண்டு, மூன்று இடம் வந்திருக்கிறது...."

"நல்ல சந்தோஷமான செய்திதான்."

மாமா சிரித்துவிட்டு மாமியைப் பார்த்தார்.

"ஏதாவது உதவி தேவைன்னா சங்கோஜப்படாம கேளுங்கோ. எதுவா இருந்தாலும்..."

ரேவதி யோசியாமல் 'சட்'டென்று இருவர் காலிலும் விழுந்தாள்.

அவர்கள் அவளுக்கு எவ்வளவு பெரிய ஐஸ்வர்யத்தைக் கொடுத்திருக்கிறார்கள். கேவலம் பொன்னும் பொருளும் அதன் புனிதத்தைக் குறைத்துவிடக் கூடாது....

உடல் மெல்ல குலுங்கியது.

"என்ன ரேவதி...." மாமி அன்புடன் அணைத்துக் கொண்டாள்.

"நீ எங்கே போனாலும் நன்னாயிருப்பே."

இதுபோதும். இதைவிடப் பெரிய ஆசீர்வாதம் உலகத்தில் வேறு எதுவும் இல்லை. இது அந்த 'அம்மா'வின் ஆசி அல்லவா!

அம்மாவும் அப்பாவும் அவளை விட்டு விட்டு கிளம்பிவிட்டனர். வீட்டை இவளும் முழுமையாகச் சுற்றிப் பார்க்கவில்லை. வாசலில் திண்ணை இருப்பது மாத்திரம் தெரிந்தது. யார் யார் வீட்டு மனிதர்கள், அயல் மனிதர்கள் யார் என்று தெளிவாகப் புரியவில்லை. இது வீடா, கோவிலா.... வீடென்றால் கோவிலாகுமா....

அடுக்களையில் மாமியார் வேதா பாலை காய்ச்சிக் கொண்டிருந்தாள்.

ரேவதி தயக்கத்துடன் அருகில் சென்றாள்.

"அம்மா.... காத்தாலேந்து வேலை செஞ்சுண்டே இருக்கீங்களே... எனக்கு எல்லாம் சொல்லிக் கொடுங்கோ. நான் செய்யறேன். இந்த நாற்காலியில் உட்கார்ந்துக்கோங்கோ.

யார் யாருக்கு எப்படிக் காப்பி கலக்கணும்.."

வேதா அவளை நிமிர்ந்து பார்த்து புன்னகை செய்தாள்.

"நீ சொன்னதே போதும்மா. ஆனா அவ்வளவு சுலபத்திலே இந்த வீட்டு வேலைகளை வாயால் சொல்ல முடியாது. ஒவ்வொருத்தரும் ஒவ்வொரு தினுசு. கவனமா பார்த்துண்டே இருந்துட்டா, நிமிஷமா மனப்பாடம் ஆயிடும்.

வேதாவுக்கு உதவியாக மேலோட்டமாக காரியங்களை செய்தாள். உதிரிப் பூக்களைத் தொடுத்து வைத்தாள். புதிய பாத்திரங்களைப் பளபளப்பாகத் தேய்த்து, ஈரம் போகத் துடைத்து அடுக்கி வைத்தாள். சிதறிக் கிடந்த உடுப்புகளை உதறிப் பிரித்து சீராக மடித்து வைத்துவிட்டுத் திரும்பிய போது, வேலைக்காரி இடுப்பில் கையுடன் அதிசயித்துப் பார்த்தாள்.

"இனி கவலையில்லேம்மா.... இந்த வீட்டுக்கு இப்படி ஒரு ஆள் வருமான்னு இருந்திச்சு...."

கூடத்தில் பாய்களை விரித்து, மூலைக்கு ஒருவராக உறங்கியபின் குழந்தைகளை எழுப்பி, படுக்க வைத்துவிட்டு, வேதாவுக்கும் படுக்கையை பிரித்துப் போட்டாள். மணி பத்தடித்து ஓய்ந்தது.

"போதும்மா ரேவதி.... ஒரே நாள்லே எல்லாத்தையும் இழுத்துப் போட்டுக்காதே. நேரமாச்சு. போய்ப் படுத்துக்கோ. அந்த மேடைல சொம்பில் பால் வெச்சிருக்கேன். அப்புறம் காத்தால நீ பாட்டுக்கு சீக்கிரம் எழுந்துண்டு வந்து நிக்காதே. அவசரமில்லாம வா...."

பௌர்ணமி நிலவின் வெளிச்சம் பாலாய்; இண்டு இடுக்கு விடாமல் வியாபித்துக் கொண்டிருந்தது.

ராஜாராமன் படித்துக் கொண்டிருந்த புஸ்தகத்தை மூடி மேஜை மேல் வைத்தான். ஏதோ யோசித்தான்.

அருகில் அமர்ந்தவளைப் பார்த்து நிதானமாகக் கேட்டான்.

"உங்க அப்பா ஊருக்குப் போகுமுன் என்னைத் தனியா பார்த்து ஒரு வார்த்தை சொன்னார் ரேவதி...."

ரேவதி ஆச்சரியத்துடன் கவனித்தாள்.

"இந்த இடத்துக்குத்தான்.... என்னைத்தான் கல்யாணம் செஞ்சுப்பேன்னு சொன்னயாமே...."

"ம்...."

"ஏன்....."

அவள் தயங்கினாள்.

"இங்கே நான் சந்தோஷமா இருப்பேன்னு தோணித்து. எனக்கு எப்பவும் நிறைய மனுஷா வேணும். கலகலப்பா இருக்கற வீடு வேணும்."

".... அதனாலே உங்கப்பா உன்னை நல்லா வெச்சுக்கணும்னு கண்கலங்கச் சொன்னார்..." அவன் சற்றுத் தயங்கினான்.

"ஒண்ணு நெனைவு வெச்சுக்கணும் ரேவதி. ஒரு பெரிய குடும்பத்தில் பெரிய பையனை கல்யாணம் செஞ்சுக்கறதுங்கறது சாதாரண விஷயமில்லே. நிறையத் தியாகம் செய்யத் தயாராய் இருக்கணும். கடமையெல்லாம் தலைக்குமேல் இருக்கு. நம்ம இஷ்டம் போல நாலு இடத்துக்குப் போய் வரவும் முடியாது. நமக்குன்னு ஒரு வாழ்க்கையைப் பாக்கறதுக்குள்ளே தலை நரைச்சிடும்."

"இனி உங்க கடமையெல்லாம் என் கடமை. உங்க பொறுப்பெல்லாம் என் பொறுப்பு."

ராஜாராமன் சந்தோஷத்துடன் அவளைப் பார்த்தான்.

"மற்றொரு விஷயம் ரேவதி...."

ரேவதி 'பளிச்'சென்று சொன்னாள்.

"அந்தக் கவலையும் உங்களுக்கு வேண்டாம். என்னாலே உங்க குடும்பம் ஒரு நாளும் கலையாது...."

அவனுக்குக் குரல் உடைந்தது.

"இந்த வார்த்தைக்காக, உனக்கு நான் இந்த நிமிஷம் முதல் ரொம்ப கடன் பட்டுட்டேன். வாழ்க்கை பூரா உன்னைக் கண் கலங்க விடமாட்டேன். பொன் வைக்கும் இடத்தில் பூவை வைப்பேன். உன்னுடைய ஒவ்வொரு சொல்லும் எனக்கு நல்ல வாக்கு மாதிரி."

ரேவதிக்கு மெல்ல மெல்ல அந்த வாழ்க்கை புரிந்தது. படிந்தது. அவள் சத்தியமான மனசும், சாந்தி மாமியிடம் அவள் கற்றுக் கொண்ட பாடமும் ராஜாராமனை முதல் நாளே அவளுக்கு அடிமையாக்கி விட்டன.

மற்றவர் மட்டுமென்ன....

வேதாவுக்குக் கண்களில் அடிக்கடி நீர் வந்துவிடுகிறது. மெய்மறந்து ஆனந்தத்தில் திளைத்துவிடுகிறாள். பெருமையுடன் கணவரிடம் பேசுகிறாள்.

"இனிமே நமக்குக் கவலையே இல்லை.

வேலை, வேலை என்று சதா சர்வ
காலம் ஓடி விட்டு மாலை வேளைக
வில் டீ. வி. யின் முன்பு உட்கார்ந்
தால் உங்கள் குழந்தை "எங்க
அப்பாவுக்கு எதுக்குமே நேர
மில்லை" என்று கமெண்ட் அடிக்
கும். கால் மணி நேரம் குழந்தை
களுடன் பேசி அவர்களின்
பிரச்னைகளுக்கு ஒரு வடிகாலாக
இருங்கள். குழந்தைகள் பெற்றோ
ருடன் எதையாவது பகிர்ந்து
கொள்ள நினைக்கும்.

நமக்கும் வயசாயிடுத்தே. இவாளையெல்லாம் வளர்த்து ஆளாக்க யார் கை கொடுப்பான்னு அசந்தே போயிட்டேன்.''

ராஜாராமனுக்கு, ரேவதியைப் பார்க்கவோ, இரண்டு வார்த்தை நின்று நிதானமாகப் பேசவோ நேரமிருக்காது. பகல் வேளைகளில் கடமைகளையும், அன்றாட வேலைகளையும் தவிர வேறு சிந்தனையில்லை. ரேவதி அவனை நன்றாகப் புரிந்து கொண்டு நடந்தாள்.

தனிமையில் சாந்தி மாமி, மாமாவைப் பற்றி ஆர்வமுடன் பயபக்தியுடன் ரேவதி கூறும்போதெல்லாம் ராஜா சிலிர்த்துப் போவான்.

''உண்மையாகவா ரேவதி.... நம்ம கல்யாணத்துக்கு அவா வந்திருந்தாளா....''

''பின்னே.... ஆறு அப்ப எப்படி இதையெல்லாம் நான் உங்ககிட்டே சொல்லியிருக்க முடியும்....''

''ஒருமுறை அவா வீட்டுக்குப் போய் விட்டு வரலாம்.''

ரேவதி நன்றியுடன் அவனைப் பார்த்தாள்.

''போகலாம். அந்த நெல்லி மரத்தையும், மாட்டுக் கொட்டிலையும், அந்தக் கோவிலையும்....'' அவளுக்கு நெஞ்சமெல்லாம் நிறைந்தது.

அவர்களுக்கு அவகாசமில்லை.

உஷா, புவனா இருவரது திருமணங்களுக்குக்கூடப் போக முடியவில்லை.

''வீட்டில் வரிசையாக எல்லோருக்கும், ஸ்கூல், காலேஜ் ஃபீஸ், கட்டணும் ரேவதி. துண்டு விழுந்திடும்.... என்னைப் புரிஞ்சுப்பேயோன்னோ......!''

''உங்களுக்கு என்ன தோணறது....''

''எனக்கும் உனக்கும் இருக்கற தொடர்பு எத்தனையோ ஜன்மங்களா இருக்கற தொடர்புன்னு....''

''சாந்தி மாமி, மாமா மாதிரி....''

கஸ்தூரி கல்யாணத்துக்கு நின்றாள். பிரபு மேற்படிப்புக்குத் தயாராகிவிட்டான்.

வீட்டிற்கு வரும் பொழுது அலுவலகம் பற்றிச் சுத்தமாக மறந்து விடுங்கள். வீட்டு வேலையைப் பற்றியும் ஒரே டென்ஷனுடன் வர வேண்டாம். வந்தவுடன் உங்களை ஆசுவாசப் படுத்திக் கொண்டு குழந்தைகளின் தேவைகளைக் கவனித்தால் உங்களால் சுமுகமாக இருக்க முடியும்.

மாமனார், மாமியார் அடிக்கடி எரிச்சல் ஊட்டினால் அதைப் பெரிது பண்ண வேண்டாம். முக்கியத்துவம் கொடுக்காமல் விட்டால் பின்னால் அவர்களே உணர்ந்து கொள்வார்கள்.

வேதா கணவனின் மறைவுக்குப் பிறகு தன்னைத் தேற்றிக் கொள்ளத் தெரியாமல், பயணத்திற்குத் தயார்ப்படுத்திக் கொண்டிருந்தாள்.

''ரேவதி! வாசுவின் கல்யாணத்தை முடித்துவிட்டோம். அனு, ரங்காவை அவாவா குடும்பங்களுக்கு அனுப்பியாகி விட்டது. கஸ்தூரி, பிரபுவுக்கு வேண்டியதைச் செய்துவிட்டால், இனி பிரச்னையில்லை. நம் குழந்தைகள் வளர்வதற்குள் கொஞ்சம் ஆச்வாசப்படுத்திக் கொள்ளலாம். உன் உதவியில் 'பேங்க் பேலன்ஸ்' இருக்கிறது. கஸ்தூரிக்கும் முன்யோசனையாய் எல்லாம் தயார் செய்துவிட்டாய். கவலையே இல்லை. பிரபுவுக்கும் ஸ்காலர்ஷிப் கிடைத்துவிடும். அது சரி, ரேவதி.... இதுவரை நீ என்னிடம் எதையும் ஆசைப்பட்டு கேட்டதில்லையே. அதுவே எனக்கு என்னமோ உறுத்தலாயிருக்கும்மா....''

''நீங்கள் என்னை அப்படி வைத்ததில்லையே....''

''இருந்தாலும், உன் அந்தரங்கத்தில் ஏதாவது ஆசை இருக்கலாம் அல்லவா....''

அவள் நெகிழ்ந்து போனாள்.

''ஒருமுறை, நித்ய கல்யாணமும் பச்சைத் தோரணமுமாய் என் மனத்தில் வாழும் அந்த வீட்டை, சாந்தி மாமியைப் பார்க்க வேண்டும். கண் குளிர, அகம் குளிர, ஒரு நிமிடமாவது அந்தச் சூழ்நிலையில் நிற்க வேண்டும்.....''

''இதுக்கா இவ்வளவு ஏக்கம்! கவலையே படாதே.... நிச்சயம் உன் ஆசையைத் தீர்த்து வைப்பேன்.''

இல்லை.... அவளால் முடியவில்லை. வேதா நோய்வாய்ப்பட்டாள். இடையில் கஸ்தூரிக்கும் திருமணம் நிச்சயமாகியது. ரேவதிக்கு நேரமில்லை.

கஸ்தூரியின் கல்யாணத்திற்கென்றே காத்திருந்ததுபோல் வேதா கரைந்து போனாள்.

ரேவதிக்குத் தாங்கவில்லை. அந்த வீட்டு வாசற்படி ஏறியது முதல், உற்ற தோழியாய், ஆசானாய், அரவணைத்துச் சென்று, இன்ப துன்பங்களிலெல்லாம் உணர்ந்து செயல்பட்ட வேதாவின் மறைவு அவளை மாத்திரம் அல்ல; ராஜாராமையும் வெகுவாகப் பாதித்து விட்டிருந்தது.

ஆயிற்று. வெறிச்சென்றாகிவிட்டிருந்த வீடும், வாசலும், தோட்டமும் துரவும் மெதுவாகப் பழக்கமாகியது.

''ராஜா... ஒரு வாய் சாப்பிடப்பா. வெறும் வயிற்றுடன் படுக்காதே'' என்று கூறவோ,

''கஸ்தூரி என்ன செய்கிறாள். அவளைத் தேய்க்கச் சொல். கொஞ்ச நாழி என் பக்கத்தில உக்காரு....'' என்று ரேவதியிடம் பரிவோ, இனி வேதா வரமாட்டாள்.

''உறவுன்னு ஒண்ணு வந்தா, பிரிவும்

கூடவே வந்துடும் ரேவதி. எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டு வாழ்ந்து காட்டணும். நீ இயல்பா சிரிச்சு எத்தனை நாளாயிடுத்து."

ரேவதி சிரிக்க முயன்றாள்.

"இந்தா பத்திரம். வக்கீல் சார் நேற்று தான் ஆபீஸில் பார்த்துக் கொடுத்தார். ரங்க ராஜபுரம் வீடு உன் பெயரில் இருக்கு இப்போ...."

பெரிய வீடு. பின்பக்கமாகச் சற்று நடந்தால் படித்துறை வந்துவிடும். ஆற்றில் வெள்ளம் வரும்போது கால்வாயிலும் நீர் ஏறி பின்பக்க வாசற்படிவரை நீர் வந்து விடும். முன்பக்கம் பூவும் காயுமாக நிறைந்து நிற்கும் தோட்டம். மனம் நிறைய வாழ்ந்தார்கள் அவர்கள். எந்தக் குறையும் இல்லை. இனி அந்த வீட்டை என்ன செய்வது....

நல்ல விலைக்குத்தான் போயிற்று வீடு. ரொக்கமாகக் கையில் பணம் கிடைத்தாலும், மனம் நிலைகொள்ளாமல், எதையோ இழந்தாற்போல் கொஞ்ச நாளைக்குத் தவித்தது. துயில் வர மறுத்தது.

"மன்னி போயிட்டு வர்றேன். அண்ணா...."

பிரபு நமஸ்காரம் செய்தான்.

"அடிக்கடி லெட்டர் போடு பிரபு. உடம்பை கவனிச்சுக்கோ. நல்லா படி. சேர்ந்தாற்போல நாலைஞ்சு நாள் லீவு கிடைச்சா உடனே வந்துடு.... கையில பணம் போதுமா...."

ரேவதி வாசல்வரை கூடவே வந்து வழி அனுப்பி வைத்தாள். பிரபு ஸ்காலர்ஷிப்பில் மேற்படிப்பு படிக்க அடுத்த நகரத்துக்குப் போய்விட்டான்.

ஏ.... அப்பா.... என்ன அசுர வேகம் நாட்களுக்கு.... நானா இத்தனையும் சாதித்தேன். இல்லை 'நான்' சாதிக்கவில்லை. 'நான்' வெறும் அசக்தை."

ஒரு வேகத்தில் எழுவதுபோல் சாந்தி மாமியின் நினைவு பீறிட்டது.

"போகலாம் ரேவதி. நாளையே கிளம்புவோம். குழந்தைகளையும் அழைத்துப் போவோம்.

"அவர்களுக்கும் வயதாகி இருக்கும் அல்லவா. நிறையப் பழங்களாக வாங்கிப் போவோம்...."

ரேவதி கண் நிறைந்து நிற்கும் காட்சி கண்டு ராஜாராமன் கலங்கினான்.

"அழாதே ரேவதி... நீ இப்படி உடைந்து நிற்பதைப் பார்த்தால் எனக்குத் தாங்கவில்லை...."

எத்தனை வருடங்கள்! சுற்றுப்புற சூழ்நிலையெல்லாம் அடையாளமே தெரியவில்லை.

குறிப்பிட்ட தெரு நெருங்க நெருங்க ரேவதிக்கு நிலைகொள்ளவில்லை.

"அதோ பார்த்தீர்களா... அந்த வெள்ளை நிற பங்களா" ஆர்வமும் பக்தியுமாக ராஜாராமன் அந்த வீட்டைப் பார்த்தான்.

வீட்டை நெருங்க நெருங்க அதன் அசாதாரண அமைதி இருவரையும் கலவரப் படுத்தியது. வாசலில் கோலமின்றி இருந்த தோற்றம் துணுக்குற வைத்தது.

ரேவதியைப் பார்வையால் சமாதானப் படுத்தியவாறே பெரிய 'கேட்'டைத் திறந்தான்.

செடிகள் பூத்துக் குலுங்கிக் கேட்பாரற்று கிடந்தன. வாடி உதிர்ந்த பூக்கள் காற்றில் அலைமோத அந்த நிலை ரேவதியை வேதனைப் படுத்தியது. வாசலில் தொங்கிய பெரிய பூட்டைச் சற்று நோக்கிவிட்டு, வீட்டை மெதுவாகச் சுற்றி வந்தனர் இருவரும். வெறிச் சென்றிருந்த மாட்டுக் கொட்டிலைக் காணச் சகியாது சிலையாக நின்றுவிட்டாள் ரேவதி. பாரம் தாங்காமல் நெல்லி மரம் பழமாகப் பழுத்து உதிர்ந்து....

இந்தக் கோவில் ஏன், எப்போது பாழடைந்தது? இதில் உறைந்திருந்த தெய்வங்கள் எங்கே?

"என்ன ரேவதி....."

"நான் இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஏன்னு தெரியலை. கொஞ்ச நேரம் அழணும் போல இருக்கு....."

மாட்டுக் கொட்டிலிலேயே உட்கார்ந்து கண்ணீர் விட்டாள் ரேவதி.

அவள் சமாதானம் அடையும்வரை காத்திருந்த ராஜாராமன், "பக்கத்து வீட்டில் விசாரிக்கலாம் ரேவதி. அவாளுக்குத் தெரிஞ்சவா யாராவது இருக்காளா....

கண்களை மௌனமாகத் துடைத்துக் கொண்டாள் ரேவதி.

"ரெண்டு, மூணு வீடு தள்ளி ஒருத்தர் இருக்கார். சில சமயம் இங்கே வந்து பார்த்திருக்கிறேன்."

"அங்கே போய் விசாரிக்கலாம் வா..."

நல்லவேளை.... ரேவதிக்கு அந்த வயதானவரை அடையாளம் புரிந்தது. அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை.

குழந்தைகளைத் தாத்தா, பாட்டியுடன் நெருங்கிப் பழக விட வேண்டும். அவர்கள் கதை சொல்லும் பாங்கும், குழந்தைகளிடம் காட்டும் பொறுமையும் உங்களுக்கு இருப்பதில்லை. நிறைய குடும்பங்களில் பேரக் குழந்தைகளால்தான் உறவு முற்றிலும் அறுந்து போகாமல் இருக்கிறது.

உறவினர்கள் திருமணம், அவர்கள் வீட்டில் சாவு இவற்றிற்குப் போக முடியாவிட்டால் குறைந்தபட்சம் வாழ்த்து, கடிதமாவது எழுதினால் உறவுகள் பலப்படும்.

உட்கார்ந்தவுடன் ராஜாராமன் மெதுவாக விசாரித்தான்.

''யாரு... ராகவன் சாரைத்தானே கேட்கிறீர்கள்... அமோகமா வாழ்ந்தார்கள். அடக்கமான குத்துவிளக்கா இருந்தாலும் ஜோதி நல்லாத் தெரியும்.... அடடா....''

ரேவதியை நோக்கினான் ராஜாராமன்.

''இப்போ யாருமே இல்லையே...''

''அப்பாவும் அம்மாவும் கட்டிக் காக்கற மட்டும் பிள்ளைகள் ஒண்ணா இருந்தா.. அப்புறம் என்ன...? சிறகு முளைச்ச பறவையா பறந்துட்டா.. வீடா அது... எப்படித்தான் விக்க மனசு வந்ததோ...''

'அப்போ மாமா மாமி ரெண்டு பேரும் இல்லையா...?'

ராஜாராமன் யாசிப்பது போல் ரேவதியைப் பார்த்தான். 'என்னை மன்னிச்சுடு ரேவதி... உன் ஒரே ஆசையை என்னால் நிறைவேத்த முடியலே...'

''இத்தனை நாளா நீங்க வந்ததே இல்லையே... இப்ப வந்தவா, இன்னும் ஆறேழு மாசம் முன்னாலே வந்திருக்கலாம்... சரி... உள்ளே வாங்கோ... ஏதாவது சிரமப் பரிகாரம் பண்ணிக்கலாம்...''

வீட்டுபெண்மணிகள் சூடாகக்காப்பியும், இட்லியும் பரிமாற, பசி அடங்கியதும், ராஜாராமன் நிதானத்துக்கு வந்தான்.

ரேவதி உள்ளே பேசிக் கொண்டிருக்கையில், வாசலில் பெரியவருடன் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தான். மீண்டும் உள்ளே வந்தான்.

''ரேவதி...''

ரேவதியின் தெளிவில்லாத முகத்தை வேதனையுடன் பார்த்தான்.

''ரேவதி! எனக்குக் கொஞ்சம் வேலை இருக்கிறது இங்கே... நீ ஒன்று செய்... குழந்தைகளை அழைத்துக் கொண்டு ஊருக்குப் போ... நான் கூடிய சீக்கிரம் வருகிறேன்...''

ஒன்றும் புரியாமல் விழித்த குழந்தைகளையும், ரேவதியையும் ஊருக்கு அனுப்பி வைத்தான்.

''ராஜாராமன் திரும்பி ஊருக்கு வர, கிட்டத்தட்ட இருபது நாட்களுக்கும் மேலாகி விட்டன.

ரேவதி, விவரம் தெரியாமல் தவித்து விட்டாள்.

''என்ன விஷயம்,... ரொம்ப கவலைப்பட்டுவிட்டேன்...''

''எவ்வளவு பெரிய காரியத்தை முடித்து விட்டு வந்திருக்கிறேன் தெரியுமா ரேவதி... உனக்கு ஒரு பெரிய இழப்பைத் தந்துவிட்டேன்... அதற்கு ஈடாக எதுவும் தர முடியாவிட்டாலும், மன சமாதானத்திற்கு வழி காணலாம் இல்லையா...?''

ரேவதி பதில் பேசவில்லை.

''இத்தனை வருஷ ஜீவிதத்தில் நீ எத்தனை பெரிய சத்துள்ள ஜீவன் என்று தெரியும். அப்படிப்பட்ட உன்னை அவ்வளவு தூரம் கவர்ந்தவர்கள் எத்தனை பெரியவர்களாக இருக்க வேண்டும்...!''

''அதெல்லாம் எதற்கு இப்போ...?''

ராஜாராமன் விவரமாகச் சொன்னான்.

''அந்த வீட்டை வாங்கியவர், என்ன ஐடியாவில் அதைவாங்கியிருக்கிறார் என்று நினைக்கிறாய். அதை இடித்துத் தரை மட்டமாக்கி விட்டு அடுக்கு மாடி வீடுகள் கட்ட...''

''அடடா...

''நான் என்ன செய்தேன் தெரியுமா...? கூட பணம் கொடுத்து அந்த வீட்டையே உன் பெயருக்கு வாங்க ஏற்பாடு செய்துவிட்டேன்.''

ரேவதி கண்களை அகல விரித்து இமைக்காமல் அவனை நோக்கினாள்.

''நெஜம்மாவா...?''

''ஆமாம் ரேவதி...'' அவள் கைகளை அன்புடன் பற்றி அமர வைத்தான்.

''அது மாத்திரமல்ல. 'நித்திய கல்யாணம். பச்சைத் தோரணம்' என்று அன்றொரு நாள் ஒரு வார்த்தை சொன்னாய் அல்லவா... அப்படியே, அந்த வீட்டை கூடுமானவரை மாற்றாமல், ஒரு கல்யாண மண்டபமாக்கி விடலாம் என்றிருக்கிறேன். பெயர் என்ன தெரியுமா...? 'நித்ய கல்யாணி...'

ரேவதி அயர்ந்து அமர்ந்து விட்டாள்.

''ஆள் வைத்துத் தோட்டம் எல்லாம் சுத்தம் செய்துவிட்டேன். நீ சொல்வது அத்தனையும் எத்தனை உண்மை... அந்த வீடு அத்தனை உன்னதமான வீடு... ஆனந்தமயமான இரு ஜீவன்களின் சன்னதி அது...''

ராஜாராமன் உணர்ச்சி வயப்பட்டிருந்தான்.

ரேவதி கண்களில் நீர் வழிய அவனைப் பார்த்தாள். மெய் சிலிர்க்க, வெகுநேரம் அமர்ந்திருந்தாள்.

மனைவியின் உறவினர்களுக்கு மதிப்பு கொடுப்பது அவசியம். சின்ன விஷயந்தான். இதைச் செய்தால் அவள் எவ்வளவு சந்தோஷப்படுவாள் என்பதை நீங்கள் செய்தால் அனுபவத்தில்தான் உணர முடியும்.

எதிர்காலத் திட்டங்கள், உங்களது திட்டங்களை மனைவியைக் கலந்து ஆலோசிக்கவும், மனைவியும் குடும்பத்தில் ஒருத்தி. 'அவளுக்கென்ன தெரியும்?' என்ற மனோபாவம் அவளை ஒதுக்கிவிடும்.



# உறவுக்குச் சட்டம் என்ன செய்யும்?

டி. ஆர். ரமேஷ்

குடும்ப உறவுகளைப் பொறுத்தவரை சட்டங்கள் மிகக் கடுமையாக இருப்பதில்லை. காரணம், நமது நாடு திருமணத்தை மிகப் புனிதமாக நினைப்பதுதான். பாரத நாட்டில் ஒரு கணவனும், மனைவியும் அத்தனை எளிதாக விவாகரத்து பெற்றுவிட முடியாது. அதற்கு ஏராளமான நிபந்தனைகளை விதிக்கிறது நீதிமன்றம். தவிரவும் வழக்கறிஞர்களோ, நீதிபதியோ தம்பதிகளை அழைத்துப் பேசவும் செய்வார்கள். வேறு வழியில்லையென்றாலோ, அல்லது கணவன் அல்லது மனைவி இருவரில் ஒருவருக்குத் தீராத வியாதி அல்லது கொடுமை போன்ற காரணங்களாலோதான் விவாகரத்து பெற முடிகிறது.

ஓர் இல்லறத்தைப் பொறுத்தவரை கூடி வாழ்வதும், பிரிந்து வாழ்வதும் அவரவர் மனநிலையைப் பொறுத்தது. குடும்ப உறவுகளைப் பொறுத்தவரை யாரேனும் ஒருவர் தவறு செய்வாரானால் அவரை சட்டப்படி மனமாற்றம் செய்வது என்பது இயலாத காரியம்.

ஒருவருக்குப் பரம்பரைச் சொத்து அல்லது தந்தையின் சொத்து வரவேண்டும் என்றால் நீதிமன்றம் வாங்கித் தரலாம். ஆனால் தன்னை விட்டுப் பிரிந்து போன கணவன் அல்லது மனைவி தன்னுடன் மீண்டும் வந்து வாழ வேண்டும் என்பதைச் சட்டம் கூற இயலுமா? இயலும். அதாவது 'மணவாழ்க்கையைத் திரும்பப் பெறக் கோரல்' என்ற சட்டத்தின் கீழ், சரியான காரணம் காட்டாமல் தம்பதிகளில் ஒருவர் பிரிந்து சென்றால், அவர் மீண்டும் தன்னுடன் வந்து வாழ வேண்டும் என நீதிமன்றம் உத்தரவிட வேண்டும் என வழக்குப் போடலாம் வழக்கிலும் வெற்றி பெறலாம்.

ஆனால் மணவாழ்விலே ஏதோ ஒரு காரணத்தால் அதிருப்தியுற்று வெளியே சென்றவரை நீதிமன்றம் மனமாற்றம் செய்ய இயலுமா? இயலாது. மனைவியுடன் சென்று வாழ வேண்டும் என நீதிமன்றம் உத்தரவிடும். அவன் மனம் ஒன்றித்தான் வாழ்கிறான் என்பது என்ன நிச்சயம்?

எனவேதான் கணவன் மனைவிக்குள்ளே தகராறுகள் வருமானால் அதைச் சுமுகமாகவே தீர்க்க முயலுவார்கள். இருவரையும் பல முறை அழைத்து வைத்துப் பேசுவார்கள்.

நம்முடைய இந்திய நாட்டின் திருமணச் சட்டங்கள் மதக்கோட்பாடுகளின் அடிப்படையில் அமைந்தவைதான். இந்துத் திருமணங்களைப் புனிதமான சடங்காகக் கருதுகின்றனர். அதை ஒரு ஒப்பந்தமாக நினைப்பதில்லை. எனவேதான் அவரவர் நம்பிக்கைகளின் அடிப்படையிலே திருமணம் செய்து கொள்ளலாம் என்பார்கள். சடங்குகளைக் கொண்ட திருமணம், பதிவுத் திருமணம்,



சுயமரியாதைத் திருமணம் எனப் பலவிதத் திருமணங்களுக்கும் ஒப்புதல் அளிக்கின்றனர்.

முன்பே, இந்தியத்திருமணங்களில்விவாகரத்து அத்தனை எளிதல்ல என்று சொன்னேம். இங்கே ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டும். திரைப்படங்களிலும், கதைகளிலும் கணவன் மனைவியை ஒரு காகிதத்தைக் காட்டி மிரட்டுவான்.

"ஏய், இதில் கையெழுத்துப் போடு. நான் இரண்டாவது திருமணம் செய்து கொள்ள நீ சம்மதிப்பதாக இதில் எழுதி இருக்கிறது. மரியாதையாக ஒப்புக் கொள். இல்லையென்ருல் உன்னைத் துரத்தி விடுவேன்..."

என்பான். ஆனல் சட்டப்படி இப்படிப் பட்ட கையெழுத்து செல்லுமா? செல்லாது. மனைவி உயிருடன் இருக்கும்வரை இன்னெரு பெண்ணைக் கணவன் திருமணம் செய்து கொள்ள முடியாது. ஒப்புதல் கடிதம் கொடுத்திருந்தாலும் அவையெல்லாம் செல்லாதவைதான். ஒருவன் மீண்டும் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்ருல் ஒன்று மனைவி உயிருடன் இருக்கக் கூடாது. இல்லையென்ருல் விவாகரத்து பெற்றிருக்க வேண்டும்.

பல அபலைப் பெண்கள் கணவனல் கைவிடப்பட்டு எந்த உரிமையும் கோராமல் வருந்துகிருர்கள். மணமான பெண்களுக்குத் தங்கள் கணவனின் வருமானத்திலும், சொத்திலும் பங்கு கேட்க உரிமையுண்டு. வழக்குத் தொடுக்க வசதியில்லாத ஏழைகளுக்கு இலவசச் சட்ட ஆலோசனைகளைச் சொல்லவும், இலவசமாக வழக்காடவும் ஆங்காங்கே நீதிமன்றங்களிலே இலவசச் சட்ட உதவிக் குழுவே இயங்கி வருகிறது.

கணவன் மனைவி உறவு முறியும் போது தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ள இயலாத மனைவி ஜீவனும்சம் கோரலாம். மனைவி வசதியாக இருந்து கணவன் சம்பாதித்து வாழ்க்கை நடத்துவதற்கே இயலாதவனுக இருந்தால் அவனும் மனைவியிடம் ஜீவனும்சம் கோரலாம்.

தாய் தந்தையர் மகனிடமும் ஜீவனும்சம் கோரலாம். இன்றைக்குக் கூட்டுக் குடும்பங்கள் சிதறிவிட்டன. மாமியார், மாமனர் என்பவர்களையே பாரமாக நினைக்கும் காலம் வந்து விட்டது. பல இடங்களிலே முதியோர் இல்லங்கள் தோன்ற ஆரம்பித்திருப்பது மிகவும் வருந்த வேண்டிய விஷயம். சிலர் முதியோர் இல்லங்களிலாவது தங்கள் தாய் தந்தையரை விடுகின்றனர். இன்னும் சிலரோ நடுத்தெருவிற்கே பெற்றவர்களைத் துரத்துகின்றனர்.

அப்படிப்பட்டவர்கள் தங்களது மகன்களிடம் ஜீவனும்சம் கோரி வழக்கைத் தொடரலாம். ஆனல் ஒரே பெண்ணுக இருந்து வளர்ந்திருந்தாலும், மகனே இல்லாவிட்டாலும் மகளிடம் ஜீவனும்சம் கோரச் சட்டம் இடம் தரவில்லை. பெற்றவர்களைக் காக்க வேண்டிய கடமை மகனுக்கே உண்டு என்ற வகையில்தான் சட்டம் உள்ளது.

அவசர அவசரமாக வேலைக்குப் புறப்படுகிறீர்கள். இந்த நேரத்தில் வயதான மாமனர், மாமியார் "இந்தக் கண்ணாடியை மாற்றிக் கொண்டு வருகிறாயா? "இந்த மருந்து தீர்ந்து போயிருக்கு?" என்பார்கள். இதை சாயந்திரம் சொன்னால் என்ன என்று நீங்கள் கேட்கலாம். முதுமை இரண்டாவது குழந்தைப் பருவம். உங்களின் கவனத்தையும், அன்பையும் கவரவே சில சமயங்களில் இவ்வாறு நடந்து கொள்கிருர்கள். நான்கு சுவருக்குள் வாழும் அவர்களுக்கு இது பெரிய விஷயம். முதல் நாளே அவர்களிடம் சிறிது நேரம் செலவழித்து, தேவை என்ன என்று கவனித்தால் பாதிப் பிரச்னை குறையும்.

சட்டரீதியாகப் பெற்றவர்கள், பிரிந்து விட்டால் குழந்தைகள் யாரிடம் இருப்பார்கள்? இயற்கைப் பாதுகாவலர் (நேச்சுரல் கார்டியன்) தந்தையே. அடுத்த இடத்தைத் தாய் பெறுகிருள். ஆனல் மிகச் சிறிய குழந்தையாக, பராமரிப்புத் தேவையான குழந்தையாக இருந்தால் தாயாரிடமே குழந்தை ஒப்படைக்கப் படுகிறது. விவரம் தெரிந்த குழந்தையாக இருந்தால் 'உனக்கு யாரிடம் இருக்க விருப்பம்?' என நீதிபதி கேட்டு அதன்படி முடிவெடுக்கிருர்.

எப்படியானுலும் குழந்தைகளுக்கு, இயற்கைப் பாதுகாப்பாளர்களான பெற்றேர்களைத் தவிர வேறு யாரையேனும் பாதுகாவலராக நியமிக்க வேண்டுமானல் அதை நீதிமன்றங்கள்தான் நியமிக்க வேண்டும்.

சொத்துக்களே பெரும்பாலான உறவுகளுக்குக் கோடரியாக அமைகிறது. நேற்று வரை ஒன்ருக வளர்ந்த அண்ணன் தம்பிகள் இன்று வெட்டுப் பழி, குத்துப் பழியில் இறங்குகிருர்கள்.

1956 க்குப் பின் பெண்களுக்கும் சொத்திலேசமபங்கு உண்டு எனும் சட்டம் கொண்டு வந்தார்கள். அதே போல முன்பெல்லாம் வாரிசு இல்லாத ஒரு பெண்தான் விரும்பிய வாரிசை தத்து எடுத்துக் கொள்ள உரிமை யில்லாமல் இருந்தது. ஆனல் இப்பொழுது பெண்களும் தத்து எடுத்துக் கொள்ளும் உரிமையைப் பெற்றுள்ளார்கள்.

பெண்களின் நலனுக்காக பல சட்டங்களும், சட்டத் திருத்தங்களும் கொண்டு வரப்பட்டுள்ளன. வரதட்சணைக் கொடுமைக்குத் தண்டனை என்பது அவற்றுள் முக்கியமான ஒன்று.

சட்டங்களைச் செய்யலாம், அவற்றை வழக்கு எனும் வில்லிலே தொடுத்து அம்பாக்கலாம். ஆனல் நடைமுறையில் குடும்ப உறவுகள் நிலைக்க அன்பு மனமும், விட்டுக் கொடுத்தலும் பொறுமையும்தான் தேவை — கொடுமை மிஞ்சி 'இனி பொறுப்பதற்கில்லை' எனும் நிலை வரும்போது வில்லை எடுக்கலாம். வாழ்விற்குச் சட்டம் வழி சொல்லும். நாம் அதைப் பின்பற்றி நடந்தால் நல்ல இடத்தை அடையலாம்.

# maurya

## எளிமை, திறமை
## மௌரியாவின் பெருமை




maurya
வாஷிங் மெஷின்.

*சலவை தோறும் பொலிவு*

## *மின்னல் வேக சலவைக்கு*

தாமிக்க, இயக்குவதற்கு எளிமையான சிவர்ஸ்சபில் வாஷிங் மெஷின் மௌரியா. மௌரியா வாஷிங் மெஷின் உங்கள் துணிகளை ஐந்தே நிமிடங்களில் சலவை செய்யும் திறமை கொண்டது. மௌரியாவில் உள்ள ஜப்பானிய டைம்மர் நீங்கள் குறித்த நேரத்தில் மெஷினை தானாகவே ஆஃப் செய்வதால் சலவையின்போது உங்களது கண்காணிப்பு தேவையில்லை. மௌரியாவில் அமைந்துள்ள மோட்டார் இருதிசையிலும் விட்டு விட்டு சுழல்வதால் துணிகள் நன்றாக சலவை செய்யப்படுவதுடன் 30 சதவீதம் மின்சாரமும் 70 சதவீதம் சோப்பு செலவும் மிச்சமாகிறது. தொல்லையின்றி நீரை ஊற்றவும் வெளியேற்றவும் எளிதான கட்டுப்பாடுகளை கொண்டது மௌரியா.

மௌரியா வாஷிங் மெஷினுடன் துணிகளை அயர்ன் செய்ய வசதியாக லாமினெட்டட் பலகை இணைக்கப்பட்டுள்ளது. மேலும்

- துருபிடிக்க இயலாத அலுமினிய வடிவமைப்பு
- மெஷினை எளிதில் நகர்த்தவும் இடம் மாற்றவும் சக்கர உருளைகள்
- தாமிக்க AISI 304 தகுதிபெற்ற ஸ்டியின்லெஸ் ஸ்டீல் டிராம்
- திறமைமிக்க உடனடி சர்வீஸ் வசதிகள்

இவை அனைத்தும் கொண்டது மௌரியா வாஷிங் மெஷின். மௌரியா வாஷிங் மெஷின் இப்பொழுது டிரையருடனும் தனியாகவும் கிடைக்கின்றது. இரண்டில் ஒன்றை உங்கள் வசதிகேற்ப தேர்ந்தெடுங்கள். எவ்வகையிலும் நீங்களே வெற்றி பெற்றவர் ஆவீர்கள்.

இவற்றுக்கு சிகரமாக விற்பனைக்கு பின் சிறப்பான சேவை.

---

மௌரியா வாஷிங் மெஷின்
இப்பொழுது தாமிக்க ½ H.P. ராலி உல்ஃப் மோட்டாருடன் கிடைக்கிறது.

---

கர்னாடகா, ஆந்திரா மற்றும்
தமிழ்நாட்டிற்கு விநியோகஸ்தர்கள்.

## திரிப்தா மார்கெட்டிங் பி. லிட்.,

139, பாரதி சாலை (பைக்ராப்ட்ஸ் ரோடு)
சென்னை-600 014 போன் : 88599
பெங்களூர் போன் : 563322, ஹைதராபாத் போன் : 221224

Adhiti/M 488

### விளையாட்டுக்கள் பலவிதம்

காராத்தே, சதுரங்கம், குத்துச் சண்டை, ஹாக்கி, போன்ற பல விளையாட்டுக்களின் வரலாறுகளையும், அவற்றில் புகழ்பெற்ற வீரர்களைப் பற்றியும் மேலும் பல தகவல்களையும் தருகிறார் ஆசிரியர் குண்டுமணி. விளையாட்டுத் துறையில் ஆர்வம் மிக்கவர்கள் படிக்க வேண்டிய நூல்.

விலை ரூ. 8/—

(பாரதி பதிப்பகம், 108, உஸ்மான் சாலை, தி.நகர், சென்னை — 17.)

### தாயும், சேயும்

தாய், சேயைப் பற்றிய அழகிய மரபுக் கவிதைகள். ஆசிரியர்: முரளிதரன். விலை ரூ. 16/—

(வி. சி. ஸ்ரீராம், 3, தெற்கு மாட வீதி, சென்னை—4)

### லக்ஷ்மி கடாக்ஷம்

லக்ஷ்மியைப் பற்றிய கதைகள், ஸ்துதிகள். ஆசிரியர்: நஜன். விலை ரூ. 8/—

பிரதிபா பிரசுரம், 39, அடம் தெரு, சென்னை—4.)

### சிரிக்க, ரசிக்க, சிந்திக்க...

தலைப்புக்கேற்ற பல குட்டிக் கதைகள். ஆசிரியர்: பி. சி. கணேசன். விலை ரூ. 7/—

### சவால்களும் சந்தர்ப்பங்களும்

சிந்தனையைத் தூண்டும் நூல். ஆசிரியர்: பி. சி. கணேசன். விலை ரூ. 7/—

### சிறப்போடு சிக்கனமாக வாழ்வது எப்படி?

யோசனைகளை வாழ்வில் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கங்களுடன் கூறும் நூல். ஆசிரியர்: வேலவன். விலை ரூ. 8/—

### பல்லாண்டு வாழ்க

ஆரோக்கியமான வாழ்விற்கு வழிகாட்டுகிறார் ஆசிரியர் ப. நீலகண்டன். விலை ரூ. 5/—

### அவசியமான 600 மருத்துவக் குறிப்புக்கள்

ஆசிரியர் சம்பந்தம் விலை ரூ. 10/—

(இந்த புத்தகங்களின் பதிப்பாளர்: வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, சென்னை — 17.)

### திகைக்கும் ஆதுரங்கள்

துப்பறியும் நாவல். ஆசிரியர்: கலாதர். விலை ரூ. 8/—

### ரகசியம்

கலாதரின் இரண்டு குறுநாவல்களை உள்ளடக்கியது. விலை ரூ. 12/—

### பேகம் கண்கள்

பிரபல வாரப் பத்திரிகையில் பரிசு பெற்ற நாவல். ஆசிரியர்: கலாதர். விலை ரூ. 13/—

### ஒலியற்ற ஓசை

கலாதரின் மர்ம நாவல். விலை ரூ. 20/—

### பிறவிப் பயனைப் பெறுவது எப்படி?

திருமுருக கிருபானந்த வாரியாரின் கட்டுரைகள் விலை ரூ. 9/—

(இந்த புத்தகங்களின் பதிப்பாளர்: குமரிப் பதிப்பகம், 20, பெருமாள் தெற்கு வீதி, நாகப்பட்டினம் — 611 001.)

### எல்லைகளின் விளிம்பில்...

தற்காலப் பெண்களின் மனப் போராட்டங்களை நாவலாக்கியுள்ளார் வாஸந்தி. விலை ரூ. 15/—

(கங்கை புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தி.நகர், சென்னை — 17.)

### ஆவிகள் செய்யும் அதிசய சிகிச்சைகள்

ஆசிரியர் வி. ரவிச்சந்திரன் விலை ரூ. 12.50/—

### ஞாபக சக்தி வளர்ப்பது எப்படி?

ஆசிரியர் புலியூர்க் கேசிகன் விலை ரூ. 15/—

### சனிபகவானும் சாதனையாளர்களும்

ஆசிரியர்: புலியூர்க் கேசிகன் சனிபகவானின் சிறப்புக்களைக் கூறுகிறார். விலை ரூ. 3.75/—

### சித்தியளிக்கும் சிவநெறி

சிவநெறி பற்றி விளக்கும் நூல். ஆசிரியர்: புலியூர்க் கேசிகன். விலை ரூ. 10/—

### கூடுவிட்டுக் கூடு பாயும் அதிசய சக்தி

ஆசிரியர்: டி. எஸ். நாகரத்தினம் விலை ரூ. 9/—

### கடவுளைக் கண்டேன்

பல பெரியோரின் கதைகள், அறிவுரைகளின் தொகுப்பு. ஆசிரியர்: கே. வெங்கட்ராவ். விலைரூ. 5/—

### உங்கள் திசா — புத்தி பலன்கள்

ஆசிரியர்: புலியூர்க் கேசிகன். விலை ரூ. 9/—

### பூமிக்கு வந்த வானமண்டல மனிதர்கள்

விசித்திர மனிதர்களைப் பற்றிய தகவல்கள். ஆசிரியர்: வி. ரவிச்சந்திரன். விலை ரூ. 11/—

### செந்தமிழ் வேளிர் எம். ஜி. ஆர்.

முதல்வர் எம். ஜி. ஆரைப் பற்றிய ஒரு வரலாற்று ஆய்வு. ஆசிரியர் செ. இராசு.

(மேற்கண்ட ஒன்பது புத்தகங்களின் பதிப்பாளர்கள் மாருதி, பதிப்பகம், 173, பீட்டர்ஸ் ரோடு, சென்னை—14).



## புக் ஷெல்ஃப்

# சொல்ல விரும்புகிறோம்



* நவராத்திரி சிறப்பிதழில் ம. செ. யின் கைவண்ணத்தில் அருள்பாலிக்கும் அம்பாளின் திருமுகத்தைக் கண்டு மெய் சிலிர்த்து விட்டேன்.

பத்மா கோபாலன், ஸ்ரீரங்கம்.

* "கொலு ஒரு புதிய பார்வை" — கொலு வைப்பதன் நோக்கத்தைத் தெளிவாகப் புலப்படுத்தியது.

பூமா கிருஷ்ணன், நீடாமங்கலம்.

* பிரச்னைகளும் தீர்வுகளும் கதை நன்றாக இருந்தது. இன்றைய் வேஷம் போடும் பெண்மணிகளை அழகாகப் படம் பிடித்துக் காட்டி விட்டார்.

டி. எஸ். அருணகிரி, திருச்சேறை.

* 'இலவச இணைப்பு' தானே என்று ஏனோ தானோ என்று பக்கங்களை நிரப்பி வழங்காமல் உருப்படியான, பயன்படத் தக்க அம்சங்கள் பலவற்றை வழங்கிய மங்கையர் மலரைப் பாராட்ட வார்த்தைகளே இல்லை!

திருச்சி — 16, எஸ். ராஜகோபால்.

* இலவச இணைப்பின் அட்டையில் ஒளிர்ந்த அந்த அரண்மனை பிரமாதம் போங்க! தேன் பற்றிய பயனுள்ள செய்திகள் தேனாக இனித்தன.

பானு இரா. அசோக், திருச்சி — 1.

* 'அடுத்த இதழ் குடும்ப 'உறவுகள் சிறப்பிதழ்' என்று அறிவித்து விட்டுக் கூடவே 'ஒவ்வொரு இல்லத்தரசியும் படிக்க வேண்டிய இதழ்' என்கிறீர்களே, எப்படி? நாங்கள் படிக்க வேண்டாமா?

எஸ். வாசுதேவன், சென்னை — 14.

* புது உடைகள் அணிவதற்கு நம் சாஸ்திரத்தில் விதிமுறைகள் கூறப்பட்டிருக்கின்றனவா? உண்மையிலேயே ஆச்சரியப்பட்டுப் போனேன்!

வஸந்தா புரமசிவம், மதுரை — 1.

* நவராத்திரி சிறப்பிதழ் நவரத்தினம் போல் ஜொலித்தது; ஏகப்பட்ட சிறப்பம்சங்கள் அடங்கிய இந்த இதழ் மூன்றே ரூபாயா! கட்டுப்படியாகுமா ஸார்?

கே. பட்டாபிராமன், குடியாத்தம் — 2.

* நவராத்திரி வேஷங்கள் — நவராத்திரி பொம்மைகள் இரண்டும் அருமையான புகைப்படத் தொகுப்புக்கள்.

பி. பானுமதி, சென்னை — 40.

* சிவசங்கரியின் பேட்டி மிகச் சிறப்பாக இருந்தது. வாழ்க்கைக்கு வேண்டிய தத்துவச் சிந்தனைகள் அதில் இருந்தன. சிவசங்கரியின் சிந்தனை உயரத்தையும், மனப்பக்குவத்தையும் அவை எடுத்துக் காட்டின. அவருடைய சிறிய முயற்சியான 'அக்னி'யும் பாராட்டத் தக்கது.

லே. க. ஸ்ரீதரன், சென்னை — 83.

* 40 வயது திருப்பு முனையா — அருமையான கட்டுரை. அதிலும் 35 வயதில் கணவனிடம் பாசம் காட்டி நாமும் வாழ்க்கைப் பாதையில் இணைந்த சக்கரமாக இருக்க வேண்டும் என்று எண்ணும் இயல்பை வெளியிட்டது சரியே!

ரேவதி ஸ்ரீநிவாஸன், ஈரோடு.

# சுவையோ சுவை! வகையோ வகை!
## சமைத்துப் பாருங்கள்
## 7ஸ்டார் சேமியாவில்
## இட்லி, வடை, புலவு, உப்புமா, பாயசம்
## தனிருசி... பேரின்பம்.

பூப் போன்ற இட்லி, கரகரவெனும் வடை, சுவைமிகு புலவு, இனிய பாயசம், மேலும் போண்டா, உப்புமா, பக்கோடா, கட்லெட், சாக்லெட் புட்டிங் அனைத்தும் 7ஸ்டார் சேமியா கொண்டு தயாரிக்கலாம். 7ஸ்டார் சேமியா உணவு வகைகளுக்கு மேலும் சுவையூட்டுகிறது. சுவைமட்டுமல்ல. அதிகப்படியான ஊட்டச் சத்தும் அளிக்கிறது.

இன்றே 7ஸ்டார் சேமியாவில் வகை வகையான பண்டங்களை சமைத்து மகிழுங்கள்.




**7ஸ்டார்**

**சிறந்ததோர் சேமியா!**



செவன் ஸ்டார் புட் ப்ராடக்ட்ஸ்
பிரைவேட் லிமிடெட்
திருப்பதி, ஆந்திர பிரதேசம்

**இந்திய பாரம்பரியம்.**
**இத்தாலிய தொழில் நுணுக்கம்.**

CLARION/SS/8642 TAM

# திருமண மலர்

* சென்னையில்பிரபலகம்பெனி யில் கிளார்க் வருவாய் 1000/— எஸ்.எஸ்.எல்.சி. செட்டியார் சாதி அழகிய 31 வயது பையனுக்கு சென்னையில் வேலை பார்க்கும் வெளியூரானாலும் மாறி வர வேண்டும். வேலை பார்க்காவிடில் வசதியுள்ள நல்ல குடும்பப் பெண் தேவை. வரதட்சணை தேவையில்லை. ஹிந்து எந்த சாதியும் சம்மதம். பெட்டி எண்: 4056.

* ஸங்க்ருதி கோத்ரம், பிராஹ்மசரணம் அனுஷ நட்சத்திரம், 33 வயதுள்ள பி.ஏ., படித்து தனியார் நிறுவனத்தில் ரூ 1400/— சம்பளம் பெறும் பையனுக்கு நல்ல குடும்பத்தை சார்ந்த 26 வயதிற்குட்பட்ட அழகான குணமான படித்த பெண் தேவை. (பையனுக்கு இழுப்பு வியாதி எப்போதாவது வரும்) உட்பிரிவுகள் சம்மதம். பெட்டி எண்: 4057.

* பிராஹ்மசரணம், ஐயர், சங்கிருதி கோத்ரம், கேட்டை நட்சத்திரம் 29 வயது நிரம்பிய 10வது வரை படித்த, குடும்பப்பாங்கான வீட்டு வேலைகள் அனைத்தும் தெரிந்த பெண்ணிற்கு தகுந்தவரன் தேவை. உட்பிரிவுகள் சம்மதம். விரைவான எளிய திருமணம். பெட்டி எண்: 4058.

* ஹிந்து விஸ்வகர்மா வயது 36 மேநிலை பள்ளி ஆசிரியர் சம்பளம் ரூ 1000/— ஆதரவு இல்லாது தனித்து இருக்கும் எனக்கு ஓரளவு வசதியும், அழகும், குணமும் பரந்த மனப்பான்மையும் கொண்ட பெண்/விதவை/விவாகரத்தான வாழ்க்கைத் துணைவி தேவை. ஜாதி மதம் பாகுபாடில்லை. பெட்டி எண்: 4059.

* பிள்ளை இனம் வயது 28, தனியார் நிறுவனத்தில் டெலிபோன் ஆபரேட்டராக வேலை பார்க்கும் ரூ 900 வருமானம் உள்ள நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவருக்கு, தொழில் செய்ய உதவி செய்யக் கூடிய பெண் தேவை. இளம் விதவைகள் சம்மதம். பெட்டி எண்: 4060.

* வடமாள், கவுண்டன்ய கோத்ரம் வயது 39, எஸ்.எஸ்.எல்.சி. படித்து, அரசாங்க வேலையில் உதவியாளராக பணிபுரியும் பையனுக்குத் தகுந்த உத்தியோகத்தில் இல்லாத, சிவந்த நிறமுள்ள வீட்டு வேலைகளில் தேர்ச்சி பெற்ற பெண் தேவை. பெட்டி எண்: 4061

* சௌராஷ்டிரர் கோத்திரம் விஸ்வாமித்திரர் படித்து சொந்தமாக ஒர்க்ஷாப் நடத்தி வரும் மணமகன் வயது 26ம் பண்பும், குணமும் கொண்ட 20 வயது மணமகனுக்கும், படித்த குணம் கொண்ட பெண்ணும், படித்துசுயமாகசம்பாதிக்கும் நற்குணமுடைய மணமகன் தேவை. விவரம் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4062.

* (பி.ஏ.) வரை படித்துள்ள/ 28/5½ அடி/ரூ 1200/போஸ்டல் அஸிஸ்டெண்ட், பெங்களூரில் உள்ள திருச்சி சோழிய வேளாளர் (சைவம்) பிள்ளைக்கு அதே வகுப்பைச் சேர்ந்த நல்ல நிறம், அழகு, குணமும் உடைய பெண் தேவை. வேலை செய்தாலும் சைவ வேளாளராயிருந்தாலும் பரவாயில்லை. ஜாதகம், குடும்ப விவரங்களுடன் எழுதுக. பெட்டி எண்: 4063.

* க்ஷத்திரிய ராஜு குலத்தைச் சேர்ந்த 27 வயது, 5' 9'' உயரமும் சென்னைக்கருகில் மத்திய அரசில் ஜூனியர் இஞ்சினியர் வேலையிலிருக்கும் இளைஞருக்கு அதே குலத்தைச் சேர்ந்த பட்டப் படிப்பும், மத்திய அரசில் வேலை பார்க்கும் குணம் அழகுள்ள மணமகள் தேவை. நட்சத்திரம் மூலம் 4ம் பாதம். பெட்டி எண்: 4064.

* துளுவ வேளாளர் முதலியார் வகுப்பைச் சேர்ந்த எஸ்.எஸ்.எல்.சி. படித்த, மத்திய அரசில் பணிபுரியும் பெண்ணுக்கு அதே வகுப்பைச் சேர்ந்த, அரசு அல்லது தனியார் நிறுவனத்தில் நிரந்தரப் பணிபுரியும் (35—40 வயதுள்ள) மணமகன் தேவை. ஜாதகம் குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4065



* காசிப கோத்திரம் வடமாள் சதயம் நட்சத்திரம் 5' 6'' உயரம் வயது 27, பி.யு.சி. படித்த கேரள ஐயர் நல்ல குடும்பத்தைச் சேர்ந்த பெண்ணிற்கு அரசாங்க வேலையிலோ அல்லது தனியார் கம்பெனியிலோ மாதம் ரூ 1000 சம்பாதிக்கக் கூடிய வரன் தேவை. கேரளாவை சேர்ந்தவர்களுக்கு முதலிடம் கொடுக்கப்படும். ஜாதகம் இருப்பவர்களும் இல்லாதவர்களும் விண்ணப்பிக்கலாம். பெட்டி எண்: 4066.

* பிராஹ்மசரணம் ஆத்ரேய கோத்திரம். அனுஷ நட்சத்திரம், 23 வயது. சிவந்த நிறம் 5' 2'' உயரம். பி. காம் பட்டதாரி ஐயர் பெண்ணிற்கு நல்ல உத்தியோகத்தில் உள்ள பட்டதாரி மணமகன் தேவை. ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். பெட்டி எண்: 4067.

* சிர்கருணீக குலத்தைச் சேர்ந்த மணமாகி விவாகரத்து பெற்ற எந்தப் பிரச்னையுமில்லாத பெண். பெற்றோருக்கு ஒரே பெண். வயது 31. எம்.எஸ்சி, எம்.எட். அரசினர் மேல்நிலைப் பள்ளியில் முதுநிலைப் பட்டதாரி ஆசிரியையாகப் பணியாற்றும் தற்போது மாதச் சம்பளம் ரூ 1600க்கு மேல் பெற்றும் வரும் பெண்ணிற்கு அதே குலத்தைச் சேர்ந்த தகுந்த மணமகன் தேவை. ஜாதகம் மற்றும் குடும்ப விவரங்களுடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4068.

* வடமாள் ஸ்ரீவத்ஸ கோத்ரம் ரோகிணி 30 வயது 5' 6'' மாநில அரசில் ஜூனியர் அஸிஸ்டெண்ட் ஆக வேலை செய்யும் பட்டதாரி பையனுக்கு மத்திய மாநில அரசுப் பணியில் இருக்கும் மாற்றிக் கொள்ளக் கூடிய பெண் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். பெட்டி எண்: 4069.

* 29 வயதுள்ள கள்ளர் கிறிஸ்தவ வகுப்பைச் சார்ந்த மத்திய அரசு வேலையில் மாதம் ரூ 1400/— சம்பளம் வாங்கும் பெண்ணிற்கு கள்ளர், வெள்ளாளர் கிறிஸ்தவ வகுப்பைச் சார்ந்த படித்த வேலையில் உள்ள 34 வயதுக்குட்பட்ட மணமகன் தேவை. பெட்டி எண்: 4070.

* கார்காத்த சைவ வேளாளர் வயது 29 படிப்பு ITI/PUC இரயில்வேயில் (திருச்சி) வேலை பார்க்கும் பையனுக்கு திருச்சி அல்லது சென்னையில் வேலை பார்க்கும் அல்லது இரு இடங்களுக்கும் மாற்

